# வைதிக தர்ம வர்த்தனி



மலர் 13
இதழ் 4

ஆசிரியர் :
ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

விகாரிஞூ
தை மீ

## தர்ம சாஸ்த்ரச் சுருக்கம்.

*கீழவிடையல் ஸ்ரீ ஆர். முத்துசாமி அய்யர்* **1917-ம்** வருஷத்தில் இயற்றியதின் **நான்காம் பதிப்பு.**

ப்ராஹ்மணர்களின் கர்மானுஷ்டானங்களை விவரிக்கும் **வைத்யநாத தீக்ஷிதீயம்** என்ற தர்ம சாஸ்த்ரத்தின் ஆறு காண்டங்களையும் ஸங்க்ரஹமாய் தமிழில் வெளியிடப்பட்டது. **விலை ரூ. 3-00,** முன்பணம் ரூ. 3-82 }
வி. பி. யில் ரூ. 4-00 }

**கிடைக்குமிடங்கள்:** **கே. எம். நாகராஜ அய்யர்,** *கீழவிடையல், கருப்பூர்-குடவாசல் P.O. (தஞ்சைஜில்லா)*

**கிரி டிரேடிங் ஏஜன்ஸி,** Religious Book Sellers & Publishers (Near Mathunga Ry. Station,) Bombay-19.

**S. V. V. தீக்ஷிதர்,** 25. C, வடக்கு மாடவீதி, மைலாப்பூர்.

**P. B. பஞ்சாக்ஷரகுருக்கள்,** 23/1, அய்யனார் கோயில்ரோடு, Vannar Ponnai, Jafna, CEYLON.

**விகாரிஸூ தைமீ ஹேமந்தருது. உத்தராயணம்.**

| தி. | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ப்ரா திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | வியா. | ப்ர. | 60-00 | புன. | 15-27 | அ. | ப்ர. |
| 2 | 15 | வெள். | ,, | 0-58 | பூச. | 20-38 | ம. | த்வி. |
| 3 | 16 | சனி | த்வி. | 4-25 | ஆயி. | 25-05 | ம.அ. | த்ரி. |
| 4 | 17 | ஞா. | த்ரி. | 6-58 | மக. | 28-38 | ம. சி. | சது. |
| 5 | 18 | திங். | சது. | 8-33 | பூர. | 31-13 | சி. | பஞ் |
| 6 | 19 | செவ். | பஞ். | 9-00 | உத். | 32-43 | அ.சி. | ஷஷ் |
| 7 | ஜனவரி மீ 20 | புத. | ஷஷ். | 8-15 | ஹஸ். | 32-55 | சி. | சப். |
| 8 | 21 | வியா. | ஸப். | 6-10 | சித். | 31-50 | சி.அ. | அஷ் |
| 9 | 22 | வெ. | அஷ். | 2-40 | | | | |
| | | | நவ. | 57-50 | சுவா. | 29-20 | சி. | நவ. |
| 10 | 23 | சனி | தச. | 51-47 | விசா. | 25-35 | சி. | தச. |
| 11 | 24 | ஞா. | ஏகா. | 44-37 | அனு. | 20-42 | ம. | ஏகா. |
| 12 | 25 | திங். | த்வா. | 36-47 | கேட். | 14-57 | சி. | த்வா. |
| 13 | 26 | செவ். | த்ர. | 28-35 | மூல. | 8-40 | அ.சி. | த்ர. |
| 14 | 27 | புதன் ● | சதி. | 20-25 | பூரா | 2-17 | | |
| | | | | | உத்தி. | 56-12 | அ.சி. | ச.அ. |
| 15 | 1960 ஸ்ரீ 28 | வியா. | அமா | 12-42 | சிர. | 50-52 | சி. | அமா |
| 16 | 29 | வெள். | ப்ர. | 5-55 | அவி. | 46-43 | சி. | ப்ர. |
| 17 | 30 | சனி | த்வி. | 0-23 | | | | |
| | | | த்ரி. | 56-33 | சத. | 44-08 | அ.ம. | த்வி. |
| 18 | 31 | ஞா. | சது. | 54-35 | பூரட். | 43-23 | சி.அ. | த்ரி. |
| 19 | 1 | திங். | பஞ். | 54-40 | உத்தி. | 44-35 | சி. | சது. |
| 20 | பிப்ரவரி மீ 2 | செவ். | ஷஷ். | 56-48 | ரேவ. | 47-45 | அ.சி. | பஞ். |
| 21 | 3 | புதன் | ஸப். | 60-00 | அசு. | 52-40 | ம. சி. | ஷஷ் |
| 22 | 4 | வியா | ,, | 0-40 | பர. | 58-58 | சி. ம. | சப். |
| 23 | 5 | வெள். | அஷ் | 6-00 | க்ருத். | 60-00 | சி. | அஷ் |
| 24 | 6 | சனி | நவ. | 12-05 | ,, | 6-10 | அ. | நவ. |
| 25 | 7 | ஞா. | தசமி | 15-30 | ரோ. | 13-38 | சி. | தச. |
| 26 | 8 | திங். | ஏகா. | 24-40 | மிருக. | 20-55 | அ.சி. | ஏகா. |
| 27 | 9 | செவ். | த்வா. | 30-15 | திரு. | 27-40 | ம. சி. | த்வா |
| 28 | 10 | புதன் | த்ர | 34-50 | புன. | 33-28 | சி. | த்ர. |
| 29 | 11 | வியா. | சதி. | 38-18 | பூச. | 38-13 | அ.சி. | சதி. |
| 30 | 12 | வெள் ○ | பௌ. | 40-42 | ஆயி. | 41-57 | ம. | பௌ |

1உ சங்கராந்தி, 11, 26உ ஏகாதசி, 14உ ஸர்வ அமாவா.
21உ ரத சப்தமி, 23உ க்ருத்., 13, 28உ ப்ர. 29உ தைப்பூசம்.

---

**க்ஞாந ஸித்தி பெற்றவர் ஸித்தர் எனப்படுவர்.**
**தமிழ் நாட்டிலே பதினெட்டு ஸித்தர்கள் இருந்தனர்.**

यतो धर्मः ततः कृष्णः

# வைதிக தர்ம வர்த்தனீ



यतः कृष्णः ततो जयः

धर्म एव हतो हन्ति धर्मो रक्षति रक्षितः

மலர் 13 | விகாரிஸூ தைமீ | இதழ் 4



## பொருள் அடக்கம்.



**வருஷ சந்தா ரூ. 5.**

**தனிப்ரதி 44 ந. பை.**

காரியாலயம் :

**வைதிக தர்ம வர்த்தனீ,**

கடவாசல்,

வடகால் போஸ்ட்,

சீர்காழி வழி,

(தஞ்சை ஜில்லா.)

# உடல் நன்ருக உள்ளவரை தர்மம் செய்.

அடியேனது ஆசார்யர்களில் முக்ய குரு, அபிநவ வ்யாஸ ச்வேதா ரண்யம் யஜ்வா அவர்கள். சாஸ்த்ரப்படி யக்ஞம் செய்து ஸன்யாஸமும் செய்துகொண்டு ஸித்தி அடைந்தார்கள். அந்த ஆராதன தினத்தில் ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் ஸன்னதியில் ஒரு பிக்ஷை செய்விப்பது பழக்கம். அச்சமயம் காலையில் ஸம்ஸ்க்ருதத்தில் ஏகாந்தமாக ஸ்ரீயவாளது ஒரு உபதேசம் நடக்கும்.

இவ்வாண்டு கார்த்திகை சுக்ல ஷஷ்டியில் (5-12-59)ல் நடந்த உபதேசத்தின் ஸாரமே தலைப்பில் உள்ளது. அந்த அம்ருதத்தை நமது வாசகர்களும் அநுபவிக்கட்டும். "காசிகா"—"கயாப்ரயாக" இவைகளைத் திருப்பி வாசி. திருப்பிப் படித்தாலும் அப்படியேதான் வருகிறதல்லவா? காசி கயை பிரயாகை மூன்றும் எப்போதும் அப்படியேதான் இருக்கும். தற்கால அசுத்தத்தாலும் கெடாது. (அம்மூன்றிடமும் முன்போல் இல்லாததை எண்ணி யான் வருந்துவதுண்டு.)

**கீதை முதல் சுலோக வ்யாக்யானரூபமான உபதேசம்.**

க்ஷேத்ரே - உடலானது, தர்மக்ஷேத்ரே ஸதி - நற்கருமங்களைச் செய்யத் தகுதியாக உள்ளபோது, குரு-தர்மத்தைச் செய். ஏன்? யுத்ஸவ: - சண்டை செய்ய விருப்பமுள்ளவர், ஸமவேதா: - கூடியிருக்கிருர்கள். யார்? மாமகா: - அஹங்காரம், சுயநலம் முதலிய அஸுர ஸம்பத்துள்ள சித்த விருத்திகளும், பாண்டவா: - ஸத்வ குணமுள்ள தேவ ஸம்பத்துள்ள விருத்திகளும் நமது உடலில் யுத்தம் செய்யக் கூடியிருக்கின்றனர். தேவாஸுரா: ஸம்யத்தா ஆஸன் - தேவாஸுர் போர்புரிகின்றனர் என வேதம் கூறுகிறது. கிமகுர்வத - என்ன வெறுக்கத்தக்க கார்யத்தைச் செய்கிருர்கள்? ஸஞ்ஜய - உனது மநது நிர்மலமாகி மநதை நன்ருக ஜயிப்பாய்.

இங்குள்ள சப்தங்களே பின்னர் விவரிக்கப்படுவதால் அவை இங்கு வஸ்து நிர்சேதம் செய்கின்றன. இது காவ்ய சாஸ்த்ர லக்ஷணமாகும். "இதம் சரீரம் கௌந்தேய க்ஷேத்ர மித்யபிதீயதே" "குருகர் மைவதஸ்மாத்வம்" "தத்ர ஸ்ரீர்விஜய:" விஜயம் ஸஞ்ஜய பதத்தால் விவரிக்கப்பட்டது.

உடல் நற்கார்யம் செய்யத் தகுதியாக உள்ளபோதே தர்மத்தைச் செய்! ஸத்வகுணமும், தமோகுணமும் உடலில் மநதிலிருந்து வேண்டாத கார்யத்தைச் செய்கின்றன. நீ தர்மத்தைச் செய். நன்கு மநதை ஜயித்து க்ஞானத்தையும் முக்தியையும் பெறலாம்.

"சென்னை மடத்தில் வாரமொரு நாளாவது சிவரஹஸ்யம் என்னும் மஹேதிஹாஸம், குரு கீதைகளைக் கூறு."

இவ்வுபதேசத்தின்படி புரட்டாசியில் நிறுத்திய ஸ்ரீ மடத்து உபன்யாஸத்தைக் கார்த்திகையில் ஆரம்பித்தேன். அவரவர் தனக்குச் சொந்தமான தர்மத்தைச் செய்வதுடன் ஸமூஹத்திற்காகவும்சில பொது தர்மம் செய்யவேண்டுமெனக் கருத்து.

---

*சிலர் வேதாந்த தத்துவங்களை தமிழில்சுலபமாகபாடினர்.*

## க்ரந்த அறிமுகம்.

நற்கதிக்கு வழிகூறுவது தர்ம சாஸ்த்ரம். அதே ஸ்மிருதி எனப் படும். 18 ஸ்மிருதிகளையும் அலசி ஸ்ரீ வைத்யநாத தீக்ஷிதீயம் என்ற நூல் தக்ஷிண தேசத்தில் தோன்றியது.

அது க்ரந்த எழுத்தில் மூலமும் ஸ்பஷ்டமான விரிவான தமிழ் அர்த்தத்துடனும் வேத தர்ம சாஸ்த்ர பரிபாலன ஸபையால் வெளியிடப்பட்டது. குடும்ப சொத்துபோல் இது ஒவ்வொரு பிராம்மண குடும்பத்திலுமிருக்க வேண்டும். பகலில் ஸ்த்ரீகள் ஒன்றுகூடி இதைப்படிக்க வேண்டுமென ஸ்ரீ ஜகத்குரு ஆக்ஞையாகும். அபார செலவில் அச்சிடப்பட்டு அசல் விலையிலும் சிறிது குறைத்து கொடுக்கப்படுகிறது.

| | | பக்கம். | விலை. |
|---|---|---|---|
| 1. வர்ணாச்ரம காண்டம் 2 பாகம் | ... | | |
| 2. ஆந்ஹிக காண்டம் 2 பாகம் | .. | 1210 | 15—0—0 |
| 3. சிராத்த காண்டம் 2 பாகம் | ... | 1306 | 18—0—0 |
| 4. பிராயச்சித்த காண்டம் 1 பாகம் | ... | 416 | 6—0—0 |
| 5. ஆசௌச காண்டம் ,, | ... | 334 | 6—0—0 |
| 6. திதி நிர்ணய காண்டம் ,, | ... | ,, | 6—0—0 |
| இவைகளைத் தவிர | | | |
| 1. மந்த்ர ப்ரச்நம் | .. | 162 | 3—0—0 |
| 2. ஆபஸ்தம்ப தர்ம ஸூத்ரம் | ... | 214 | 4—0—0 |
| 3. போதாயன ,, | ... | 232 | 4—0—0 |
| 4. கௌதம ,, | ... | 196 | 3—8—0 |

கிடைக்குமிடம்: வேத தர்ம சாஸ்த்ர பரிபாலன ஸபை, கும்பகோணம். தபால் செலவு தனி. வி. பி. யில் பெறலாம். ஏனைய விபரங்களுக்கு ஷை சபைக்கு எழுதவும்.

## நமது நூலுக்குப் புகழுரை.

**ஸ்ரீ B. S. ராஜகோபாலன், D. Com.** விசாரத், சேலம். தங்கள் புத்தகங்களின் விலை மிகவும் ஸரஸமாகவும், விஷயங்கள் மதிப்பிட முடியாதவைகளாகவும் இருக்கின்றன. அவைகளைப் படித்து எனக்கு எண்ண முடியாத உபயோகங்களும் திநஸரி வாழ்க்கையில் ஒரு ஒழுங்கும் ஏற்பட்டன. இவை என் அந்தரங்க சுத்தியுடன் கூறும் உண்மை. ஸ்துதி அல்ல.

இதுபோல் பல வருகின்றன. வேண்டிய இடமின்மையால் அவைகளை பிரசுரிக்கவில்லை. இவரைப்போல் பலரும் படித்துப் பயன் பெற வேண்டுமென்பதற்காகவே இவ்வொன்றை மாத்ரம் வெளியிட்டோம். ஆதிமுதல் சந்தாதாரராக இருந்து இடையில் சில ஆண்டுகள் பத்ரிகை வாங்காததற்கு வருந்தி எழுதினார். மிகப் பழையதாக இருந்தாலும் யாரிடமிருந்தாலும் அதிக விலையாயினும் ஆறு வருஷ காப்பிகளைக் கேட்கிறார். 11, 12, 13தான் அநுப்ப முடிந்தது.

---

**பீஷ்மாஷ்டமீ:** தைமீ 22வ. தந்தையுள்ளோர்கூட பீஷ்ம தர்ப்பணம் செய்யவேண்டும். இல்லையேல் நாம் ஓராண்டு செய்த புண்யம் வீணாகிவிடும். மூன்று சுலோகங்களைக்கூறி மூன்று தர்ப்பணம்செய்க.

1. பீஷ்ம: சாந்தநவோவீர: ஸத்யவாதீ ஜிதேந்திரிய: ।
   ஆபி ரத் பிரவாப்நோதி புத்ர பௌத்ரோசிதாம் க்ரியாம் ॥
2. வையாக்ர பாத கோத்ராய ஸாங்க்ருத்ய ப்ரவராயச ।
   அபுத்ராய ததாமி ஏதத் ஜலம் பீஷ்மாயவர்மிணே ॥
3. வஸூநாமவதாராய சந்தநோராத்மஜாய ச ।
   அர்க்யம் ததாமி பீஷ்மாய ஆபால ப்ரும்ம சாரிணே ॥

---

**உலகில் பித்தனைப்போல் நடமாடி ஸமாதி அடைந்தனர்.**

# அக்நி கார்யத்தின் விளக்கம்.

(பக்ஷிதீர்த்தம் ய. சுப்ரமண்யதீக்ஷிதர், ஸோமயாஜி.)

(மார்கழி மீ தொடர்ச்சி)

எந்த தர்வீ அல்லது ஸ்ருக்ஸ்ருவங்களால் (தர்வீ-புரச இலை, ஸ்ருக்ஸ்ருவம் - மரத்தாலான பாத்ரம்) ஹோமம் செய்யப் போகிறோமோ அவற்றை அக்னியில் காய்ச்சி மூன்று தர்பங்களால் துடைத்து மறுபடியும் காய்ச்சி ப்ரோக்ஷித்து கீழேவைத்துவிட்டு தர்பங்களை தீர்த்தத்தால் துடைத்துவிட்டு கிழக்கு நுனியாக அக்னியில் சேர்த்து விட வேண்டும்.

இத்மம் என்பது பாலாசம் புரசு. (முறுக்கன் என்றும் சொல்வார்கள்). கருங்காலி இவைகளுள் ஒன்று உத்தமம். கிடைக்காதபக்ஷத்தில் அரசு, அத்தி முதலியதை சேர்த்துக் கொள்ளலாம். ஈரமாகவோ காய்ந்ததாகவோ இருக்கலாம். தோலிருக்க வேண்டும். இம்மாதிரியுள்ளவைகளும் ஒட்டைச் சாண் நீளமுள்ளவைகளுமான பதினேழு ஸமித்துக்களும், இதைப்போல் இருமடங்கு நீளமுள்ளவைகளாக மூன்றை பரிதிக்காகச்சேர்த்து இருபது ஸமித்துக்கட்டு இத்மம் எனப்படும்.

பலாஶம், கருங்காலி, குழுனன், அத்தி, பில்வம், செம்மரம், சொத்தக்களா, இவைகளில் ஏதாவது ஒரு மரத்தின் ஸமித்தைப் பரிதியாக எடுத்துக்கொள்ளலாம்.

17 ஸமித்துக்களும் ஒரு ஜாதியாகவும் பரிதிகள் வேறொரு ஜாதியாகவுமிருக்கலாம். ஒரே ஜாதியாகவே எல்லாமிருந்தாலும் இருக்கலாம். பரிதிகள் மூன்று விதமாக இருக்கவேணும். அதாவது மேற்கில் வடக்கு நுனியாக வைப்பது பெருமனுகவும் தெற்கில் கிழக்கு நுனியாக வைப்பது மெல்லியதாகவும் நீளமாகவும் வடக்கில் வைப்பது மெல்லியதாகவும் கொஞ்சம் சின்னதாகவும் வைக்க வேண்டும். பிறகு நடுப்பரிதியைக் கையால் தொட்டு இரண்டு (आघार) ஆகார ஸமித்துக்களையும் அக்னியில் கிழக்கு பாகத்தில் தெற்கிலும் வடக்கிலுமாக மேல் நோக்கிய நுனி உள்ளவைகளாக வைக்கவேண்டும். இவைகளிருக்கும் இடந்தான் அக்னி தேவனுக்கு காதாம்.

பிறகு தீர்த்தத்தினுல் பரிஷேசனம் செய்யவேண்டும். தீர்த்தமானது ராக்ஷஸர்களைக்கொல்ல வல்லது. அதனுல்

சுற்றிலும் நினைத்து விட்டால் ராக்ஷஸர்களுக்கு அருகில் வரமுடியாமல் போய்விடுகிறது.

இதற்குப்பின் இத்மத்தை ஆஜ்யத்தால் நனைத்து பிரும்ஹாவின் அனுமதி பெற்று அக்னியில் கிழக்கு அக்ரமாக வைத்துவிட வேண்டியது. உடனே ஜ்வாலை கிளம்பும்படியாக ஊது குழலால் ஊதி விடவேண்டியது. இதர தர்வீ அல்லது ஸ்ருவத்தால் ஆஜ்யத்தை எடுத்துக் கொண்டு ஜ்வலிக்கும் அக்னியில் வாயுமூலை முதற் கொண்டு அக்னிமூலை வரையில் நேராகவும் மத்தியில் விட்டுப் போகாமலுமிருக்கும்படி ஒரு ஹோமம் செய்ய வேண்டியது. மற்ற தர்வீ அல்லது ஸ்ருக்கால் ஆஜ்யத்தை எடுத்துக்கொண்டு நிருருதி மூலை முதல் ஈசான்யம் வரையிலும் முன்போலவே ஹோமம் செய்ய வேண்டியது. இந்த இரு ஹோமங்களுக்கும் (आघार होमम्) ஆகார ஹோமம் என்று பெயர். இதற்குப் பிறகு இந்த இரு ஹோமங்களுக்கும் வெளியில் போகாமல் எல்லா ஹோமங்களையும் செய்ய வேண்டும். வடகிழக்கில் (अग्नये) அக்நயே, தென் கிழக்கில் (सोमाय) ஸோமாய என்றும் இரு ஹோமங்களைச் செய்ய வேண்டும். இவ்விரண்டும் அக்நி பகவானது கண்கள் எனப்படும். ஹோமம் செய்யும்போது ஸ்வாஹா என சேர்த்துக்கூறுக. சக்ஷுஷீ எனப்படுமிது. பிறகு மத்தியில் ஹோமம் செய்வது தான் (मुखाहुति) முகாஹுதி என்பது. அதாவது அக்னிக்கு (मुखं) வாய் ஸ்தானம் இந்த ஹோமம் செய்யும் இடம். இதற்குப்பிறகுதான் பிரதானஹோமங்கள் அந்தந்த கர்மா கூறியபடி மந்த்ரம் தேவதை த்ரவ்யம் இவைகளைக் கண்டு அக்னியில் ஹோமம் செய்ய வேண்டும்.

பிறகு (स्विष्टकृत्) ஸ்விஷ்டக்ருத் என்னும் ஹோமத்தைச் செய்வதால் முன் ஹோமம் பண்ணினதெல்லாம் நன்கு செய்யப்பட்டதாக ஆகிவிடும். அதற்குப் பிறகு சில கர்மாக்களில் ஜயாதி ஹோமம் செய்ய வேண்டும். சில விடங்களில் கிடையாது. இதைப் பற்றியும் பின் கவனிப்போம். தர்வியிலிருக்கும் நெய்யால் (परिधि) பரிதிகளை எப்படி வைத்தோமோ அந்த கிரமமாக நனைத்து. (चरुहोम) சருஹோமம் உள்ள விடங்களில் (लेपकार्य) லேப கார்யம் செய்யவேண்டும். அதாவது (प्रधानदर्वी) பிரதாந தர்வீ தெற்கிலும் इतरदर्वी மற்றது மத்தியிலும் ஆஜ்யஸ்

---

தாலீ வடக்கிலுமாகவைத்து(पात्रसादनं) பாத்ரங்களைவைத்து பண்ணிண தர்ப்பங்களை எடுத்து அவைகளின் நுனிகளால் தர்வியையும் மத்தியத்தால் இதர தர்வியையும் அடியினுல் ஆஜ்யஸ்தாலியையும் துடைக்க வேண்டும். இம்மாதிரி மும்முறை துடைக்கவேண்டும். இதுதான் லேபகார்யம் என்பது. இது (चरुहोम) சருஹோமம் இல்லாதவிடங் களில் கிடையாது. துடைத்த தர்ப்பங்களிலிருந்து ஒரு தர்ப்பத்தை எடுத்து ஜாக்ரதையாக வைத்துவிட்டு மற்ற வைகளை ப்ரதாந தர்வியில் வைத்து இடது கை கீழும் வலக்கை மேலுமாக பிடித்துக்கொண்டு அக்னியில் நுனி யைக் கொடுக்கவேண்டும். கொஞ்சம் கொஞ்சமாக நுனியாகவே தள்ளிக்கொடுக்கவேண்டும். பிறகு எடுத்து வைத்த தர்ப்பத்தையும் அக்னியில் சேர்த்துவிட வேண் டும். இப்படி அக்னியில் சேர்த்த தர்பத்தை மும்முறை சுட்டிக்காட்டவேண்டும். இதைத்தான் நிர்தேஶநம் என் பார்கள். அக்னியைப் பார்ப்பது. இதை அக்னி அபி மந்த்ரணம் என்பார்கள். பூமியைத் தொடவேண்டியது. மேற்கு பரிதியை அக்னியில் கிழக்கு நுனியாக வைக்க வேண்டியது. பிறகு தெற்கிலும் வடக்கிலும் உள்ள இரண்டையும் சேர்த்து அக்னியில் சேர்க்கவேண்டும். அப்போது வடக்கு பரிதியின் நுனியை மட்டும் தணலுக் குள் மறையும்படியாக வைக்கவேண்டும். இதைத்தான் (इतरौ प्रहरन्नुत्तरार्ध्यस्याग्र मङ्गारेषूपोहति) இதரௌ ப்ரஹரந் நுத்தரார்த்ய ஸ்தாக்ர மங்காரேஷூ போஹதி என்பார் கள். இது புரியாமல் பலர் சிரமப்படுவார்கள். இங்குசிலர் (आघारसमित्तु) ஆகாரஸமித்துகளையும் எடுத்து அக்னியில் சேர்க்கிறார்கள். அம்மாதிரி விதி இல்லாததினுலும், பரிதி யானுல் அக்னியில் சேர்க்கும்படியும், (शाम्या)ஶாம்யாவா னுல் வெளியில் எறியும்படியும் இருப்பதாலும் இவற்றை ஒன்றும் செய்யாமல் விட்டுவிடுவதுதான் ந்யாயம். அது தானுகவே பிடித்துக்கொண்டால் பாதகமில்லை. பிறகு இரு தர்வியிலும் ஆஜ்யத்தை எடுத்துக்கொண்டு மூன்று பரிதிகளின்மேலும் ஹோமம் செய்யவேண்டும். இதுதான் ஸம்ஸ்ராவ ஹோமம் என்பது. பிறகு தெரியாமல் நேர்ந்து இருக்கக்கூடிய தோஷ நிவ்ருத்திக்காக சில ப்ராயஶ்சித்த ஹோமங்களையும், மற்றும் ஸம்பிரதாயப்படியுள்ள சில ப்ராயஶ்சித்த ஹோமங்களையும், செய்து பூர்ணாஹுதி

செய்து ஆஜ்யபாத்ரத்தை வடக்கில்வைத்துவிட்டு மூச்சுத் திணருமளவு ப்ராணயாமம் பண்ணி பரிஷேசனம் பண்ண வேண்டியது. இதற்குப் பிறகு ப்ரணீதா பாத்ரத்தை எடுத்து எதிரில்வைத்து வேறு கொஞ்சம் ஜலம் சேர்த்து கிழக்கு முதல் பிரதக்ஷிணமாக எல்லா திக்குகளையும் நனைத்து மேலும் தூக்கிவிட்டு மிச்சத்தை எல்லாம் கிழக்காக சாய்த்து அதனுல் தன்னையும் பத்னியையும் ப்ரோக்ஷித்துப் பிறகு பிராமணனுக்கு (ப்ரும்மாவுக்கு) தக்ஷிணை கொடுக்கவேண்டியது. வரம் என்ருல் கோ என்று அர்த்தம். ஆகையினுல் அதற்கு தகுந்தாற்போல் சக்திக்கேற்றவாறு ஒரு பசுவுக்கு ப்ரதிநிதியாக தக்ஷிணை கொடுக்க வேண்டும். பிறகு அக்னியுபஸ்தானம் செய்து ஸம்ப்ரதாயத்துக் கேற்றவாறு பகவானுக்கு கர்மாவை அர்ப்பணம் பண்ண வேண்டியது.

ஹோம காலத்தில் அனுஷ்டிக்க வேண்டிய சில தர்மங்கள்—வாயினுல் அக்னியை ஊதக் கூடாது. கை அலம்ப வேண்டிய சமயங்கள் — (1) ருத்ர ஸம்பந்தமான கார்யங்கள் செய்த பிறகும், — (2) ராக்ஷஸ ஸம்பந்தமான கார்யங்கள் செய்தபிறகும்,— (3) நிருருதி ஸம்பந்தமானது செய்த பிறகும்.— (4) பித்ரு சம்பந்தமானது செய்த பிறகும்,— (5) எதையாவது துண்டு பண்ணிய பிறகும்,- (6) எதையாவது உடைத்த பிறகும்.— (7) நிரஸநம் = (எறிவது) செய்த பிறகும், - (8) தன்னைத்தொட்ட பிறகும் அவஶ்யம் கையலம்ப வேண்டும். ப்ரோக்ஷிக்காத விரட்டி ஸமித் எதையும் அக்னியில் வைக்கக்கூடாது.

நித்ய கர்மாவான ஸந்தியா வந்தன காயத்ரீ ஜபம் இவற்றை முடித்துக் கொண்டுதான் எந்தக் கார்யமும் செய்ய வேணும். அவைகளைச் செய்யாமல் வேறெந்த கர்மாவைச் செய்தாலும் பலன் தராது. அனுவஶ்யமானதும் கர்மாவுக்கு ஸம்பந்தப் படாததுமான வார்த்தைகளைப் பேசாமலிருக்கவேண்டும். அவஶ்யம் இருவஸ்திரங்களுடன் இருந்தாகவேண்டும். ஒருவர் தரித்த வஸ்திரத்தை வேறொருவர் ஒருபோதும் தரிக்கலாகாது. அது மடியாக கருதப்பட மாட்டாது. கந்தலையும், கிழிந்த வஸ்திரத்தையும், நெருப்புப்பிடித்த வஸ்திரத்தையும் தரிக்கலாகாது. பிராமணன் வெரும் தரையில் உட்காரலாகாது. இந்த சில தர்மங்களை அவஶ்யம் கவனித்துக்கொள்ளவும்.

---

**ஜீவன் முக்தர்களை பூஜித்தால் அவர் புண்யம் நமக்குவரும்.**

## சாந்தோக்ய உபநிஷத்.

உத்கீத விஷயத்தில் சாலாவத்யர் என்ற ஸிலகர், சைகிதாயநர் என்ற தால்ப்பியர், ஜைவலி என்ற பிரவாஹனர் ஆகிய மூவரும் மிக ஸமர்த்தர்களாக இருந்தார்கள். ஸிலகர் தால்ப்யரை நோக்கி சில கேள்விகளைக் கேட்க அவர் பதில் கூறினர்.

ஸ்வரத்திற்கு கதி எது? பிராணன் தான் ஸ்வரத்தின் கதியாகும். பிராணனுக்கு கதி எது? அன்னமே பிராணனுக்கு கதியாகும். அன்னத்திற்கு கதி எது? ஜலமே அன்னத்திற்கு கதியாகும். ஜலத்திற்கு கதி எது? ஸ்வர்க்க லோகமே ஜலத்திற்குகதி. ஸ்வர்க்கலோகத்திற்கு கதிஎது? ஸ்வர்க்கத்தைக் கடந்து ஸாமத்தை ஒருவரும் கொண்டு போகமுடியாது. ஸ்வர்க்க லோகத்திற்கு கதி பூலோகமே. இங்கு ஸாமத்தைக் காநம் செய்வோம்.

இந்த லோகத்திற்கு கதி எது? எல்லாம் ஆகாசத்திலிருந்தே உண்டாகி ஆகாசத்திலேயே லயிக்கின்றன. ஆகாசமே மிகப் பெரியது. ஆதலால் இவ்வுலகிற்கு இருப்பிடம் ஆகாஶமே. இந்த வகையான ஸ்வரூபம் அமைந்த உத்கீதத்தை பரப்ரும்மம் என்று உபாஸிப்பவன் பிரும்மமாகிறான்.

ஒரு ஸமயம் இடிவிழுந்து துர்பிக்ஷம் தோன்றிய குரு தேசத்தில் சாக்ராயணி எனும் உஷஸ்தி என்பவர் பசியால் களைத்து, ருதுவாகாத ஆடகீ எனும் மனைவியுடன் ஒரு யானைப் பாகன் கொள்ளு தின்பதைக்கண்டு எனக்குக் கொஞ்சம் கொடு என்றார். அவன், இது நான் உண்டு மிகுந்த எச்சில் அல்லவா? அதை நீசனான நான் எப்படி உமக்குத் தருவது? என்றான், ஆபத்திற்கு தோஷமில்லை. கொள்ளைக் கொடு என்றார். அவனும் அளித்தான். அத்துடன்கூட குடிக்க ஜலமும் அளித்தான். அவர் உனது தீர்த்தம் உச்சிஷ்டம், எனக்கு வேண்டாம் அது என்றார். கொள்ளுமாத்ரம் உச்சிஷ்டமல்லவா? என்று அவன் கேட்டான். அது கிடைக்காதது. ஜலம் எங்கேனும் கிடைக்கும் என்றார் முனிவர். (ஆபத்திலும் எது முக்யமோ அதை மாத்ரம் பெறலாம் என தர்ம சாஸ்த்ரம்) அதை அவர் தான் சிறிது சாப்பிட்டு விட்டு தன் மனைவிக்கும் கொஞ்சம் கொடுத்தார். மறுநாள் காலையில் மஹரிஷி மனைவியை நோக்கி உண்ண ஏதேனு

---

மிருந்தால் கொடு. சாப்பிட்டு விட்டு அரசன் நடத்தும் யாகத்திற்குச் சென்று பொருள்தேடி வருகிறேன் என்றார். மனைவி முதல்நாள் அவளுக்கு ரிஷி அளித்த கொள்ளைத் தான் உண்ணாமல் வைத்திருந்து கொடுத்தாள். (தான் உபவாஸமிருந்தும் பதியின் பசியையாற்றும் பதிவிரதா தர்மத்தை என்னென்பது?) மஹரிஷி யாகசாலைக்குச் சென்றார். ஸாமகானம் செய்யும் உத்காதா முதலியவர்களிடம்சென்று நீர் எந்ததேவதையைஸ்தோத்ரம்செய்கிறீரோ, அந்த தேவதையை நன்கு அறிந்து துதிக்காவிடில் உமது தலை வெடிக்கும் என்றார். அரசன் அவரது யோக்யதையை உணர்ந்து, தாங்கள் இங்கிருந்து அந்தந்த தேவதா ஸ்வரூபத்தை விளக்கி யாகத்தைப் பூர்த்திசெய்யுங்கள். எல்லோருக்கும் அளிக்கும் தக்ஷிணை எவ்வளவோ அவ்வளவு தக்ஷிணை உமக்களிக்கிறேன் என்றார்.

பிராணதேவதை, ஆதித்யன், அன்னம் ஆகிய தேவர்களையே நன்கறிந்து துதிக்கவேண்டும் என்று கூறி உஷஸ்தி பூர்ண தக்ஷிணையைப் பெற்றார்.

பகர், தால்ப்யர், கலாவர், மைத்ரேயர் எனும் நான்கு பெயர் வாய்ந்த ஒரு ரிஷி ஸாம அத்யயநம் செய்ய வெளியில் சென்றார். அவருக்கு அருள்புரிய வேத புருஷன் ஒரு வெள்ளை நாய் வேஷந்தரித்து பிராணன் முதலிய குட்டி நாய்கள் சூழ, முனிவர் அருகே வந்தது. குட்டிகள் அதைப் பார்த்து பசிக்கின்றது! எங்களுக்கு உணவளி என்று வெள்ளை நாயைக் கேட்டன. நாளை காலை ஆகட்டுமென அது கூறிற்று. முனிவர், ஆச்சர்யப்பட்டு இது யார்? என்ன உணவு தரப் போகின்றது? பார்ப்போம் என காலை வேளையை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார். உண்ணப்போகின்ற ஸந்தோஷத்தால் ஒன்றுக்கொன்று மேலே விழுந்து நாக்கால் நக்கிக்கொண்டு விளையாடின. ஹிம் என்ற சப்தத்துடன் "ஓம் மதாமோம்பிபாமோம்" என்றும் சப்தம் கேட்டது. இதைக் கவனித்தார் ரிஷி. இது யாகத்தில் பஹிஷ்பவமானம் என்கிற ஸாமகானம். இதை அறிந்து அநுஷ்டித்தால் குறைவில்லாமல் அன்ன பானம் கிடைக்கும் என்ற தத்வத்தை வேத புருஷன் பிராணாதி தேவதைகளுடன் நமக்கு உபதேசிக்கிறார் என உணர்ந்தார். எந்த மந்த்ரத்தைக் கூறினாலும் அதன் பொருளை நன்கு உணர வேண்டும்.

---

**அதே ஸமயத்தில் சில போலிகளுமுண்டு.**

# அஷ்டாவக்ர கீதை.

கீதைப் பகுதி.

**4-ம் அத்யாயம்.** ஆத்மஸ்வரூபத்தை அறிந்த தீரன் பற்றின்றி கிடைத்த போகங்களை அனுபவிப்பதும், மூடனை ஸம்ஸாரி அனுபவிப்பதும் ஒன்ருகுமா ?

இந்த்ரன் முதலிய தேவர்கள் எந்தப் பதவியைக்கண்டு களிப்பார்களோ அந்தப் பதவியைப் பெற்ருலும் க்ஞாநி ஸந்தோஷம் அடையமாட்டான்.

ஆத்மாவை அறிந்த க்ஞாநியைப் புண்ய பாபம் அருகே அணுகாது. புகை ஆகாஶத்தில் காணப்பட்டாலும் அதில் ஒட்டுகின்றதா ?

உலகெலாம் ஆத்மாதான் என்றுணர்ந்த க்ஞானி தற்செயலாக ஏதேனும் ஒன்றைச் செய்தால் இதைச் செய்யாதே என யார் தடுக்க முடியும் ?

கருவில் உதிப்பது முட்டையில் உண்டாவது பூமி வெடித்து கிளம்புவது உஷ்ணத்தால் உண்டாவதென்ற மநுஷ்ய, பக்ஷி செடி கொடி, தேள் பாம்பு, முதலிய நால் வகை படைப்புள்ள புழு முதல் பிரும்மா வரையிலுள்ள பிரபஞ்சத்தில் க்ஞாநியே விருப்பு வெறுப்பு இல்லா திருப்பான்.

ஆத்மா அத்விதீயன். ஜகதீசன் என அறிந்தவன். அறிவிற்கேற்றபடி நடப்பான். அவனுக்கு எங்கும் பயமில்லை.

**5-ம் அத்யாயம்.** உனக்கு ஒன்றினிடமும் பற்றில்லை. சுத்தனை நீ எதை விட விரும்புகிருய் ? எல்லா வற்றையும் ஆத்மாவினிடம் லயப்படுத்தி ஜீவனும் ஆன்மாவிடம் லயமாகட்டும்.

கடலில் குமிழீ உண்டாவதுபோல் ஆத்மாவினிடம் இருந்து உலகெலாம் உண்டாகிறதென ஆத்மாவை அறிந்து அதில் லயமடை.

நேரே எதிரில் காணப்பட்டாலும் நிர்மலமான ஆத்மாவினிடம் அது உண்மையாக இல்லை. பாம்புதானிது என்று எண்ணிஞலும் க்ஞாநம் வந்தபின் கயிறுதானிது என்று தெரிவதுபோல் எண்ணி ஆத்மாவிடம் லயமடைவாய்.

ஸுகதுக்கம் விருப்பு வெறுப்பு வாழ்வு மரணம் இவைகளை ஸமமாக எண்ணி லயமடை.

---

**நல்ல ரத்நங்களைப் பரீக்ஷத்து எடுக்கவேண்டும்.**

**6-ம் அத்யாயம்.** ஆகாசம்போல் முடிவில்லாதவஸ்து நான். பானைபோல் இந்த உலகம், என்று நன்குணர்ந்தால் ஒன்றை விடுவதோ? பிடிப்பதோ? லயமோ ஏது?

நான் பெருங்கடல். உலகம் அலைபோலாம் என அறிந்தவனுக்கு எதை விடவேண்டும்? எதை ஏற்க வேண்டும்? எதில் லயமாகவேண்டும்?

நான் முத்துச்சிப்பி போன்றவன். உலக கல்பனை வெள்ளிபோலாம் என்ற க்ஞானிக்கு ஒன்றுமில்லை.

நான் ஸமஸ்த பூதங்களிடமும் இருக்கிறேன். ஸமஸ்த பூதங்களும் என்னிடமிருக்கிறதென்ற க்ஞானிக்கு ஒரு கார்யமுமில்லை.

**7-ம் அத்யாயம்.** கடல்போன்ற என்னிடம் உலகெனும் கப்பல் மநமெனும் காற்றால் அங்குமிங்கும் அலைகிறது. அதனால் எனக்கொன்றுமில்லை.

நான் ஒரு பெருங்கடல். அதில் உலகெனும் அலை தோன்றினாலென்ன? அழிந்தாலென்ன? அதனால் எனக்குக் குறைவுமில்லை. விருத்தியுமில்லை.

நான் எனும் பெருங்கடலில் உலகமென்பது ஒரு கல்பனை. நான் அதிசாந்தன். உருவில்லாதவன். ஒரே மாதிரியாக இருக்கிறேன்.

ஆத்மா என்பது பாவனையல்ல. பாவனையில் ஆத்மா இல்லை. என பற்றற்று சாந்தனாக நான் இருக்கிறேன்.

நான் கேவலம் சித்வடிவன். உலகெலாம் இந்த்ர ஜாலம் போன்றது ஆதலால் எனக்கு விடத்தக்கது எது, ஏற்கத்தக்கது துள?

**8-ம் அத்யாயம்.** மநது ஒன்றில் ஆசைவைத்தால் வந்தது பந்தம்! அப்போது ஒன்றைவிடும். ஒன்றை ஏற்கும். ஒருவரிடம் கோபம் உண்டாகும். ஒருவரிடம் ஸந்தோஷமுண்டாகும்.

மநது ஒன்றை விரும்பாமல் துக்கிக்காமல் ஒன்றை விடாமல் ஒன்றை ஏற்காமல் ஒருவரை கோபிக்காமல் ஒருவரை ஸந்தோஷிக்காமல் இருந்தால் முக்திபெறலாம்.

ஏதேனும் ஒன்றில் மநம் ஆசை கொண்டால் அப்போது பந்தம் ஏற்படும். ஒன்றிலும் பற்றில்லாதிருந்தால் முக்தி தோன்றும்.

---

**எது நிஜ ரத்நம்! எது போலி? என அறிவது கஷ்டமே.**

# பால பாரதம்

## பீஷ்ம பர்வா.

கே: மேலே யுத்தம் ஆரம்பமானதா?

ப: யுத்தம் துவக்கும் பொழுது அர்ஜுனன் எதிரில் வந்து நிற்கும் பீஷ்மர், துரோணர் முதலியவர்களைப் பார்த்து அவர்களைக் கொல்ல மனமில்லாமல் யுத்தமும் வேண்டாம் ராஜ்யமும் வேண்டாம் என க்ருஷ்ணனிடம் கூறினான்.

கே: அடடா! பின்னர் எப்படிப் போர் நடைபெற்றது?

ப: பகவான் பகவத் கீதை எனும் பதினெட்டு அத்யாயங்கொண்ட தத்துவத்தை எடுத்துக் கூறி, க்ஷத்ரியர்களுக்கு ஸ்வதர்மமான யுத்தத்தைச் செய்யும் படிச் செய்தார்.

கே: ஆனால் இதற்கு யுத்த பர்வா என்றல்லவா பெயர் வைத்திருக்க வேண்டும்?

ப: ஆம், நீ கூறுவது சரியே! பீஷ்மர் முன்னின்று பத்து நாள் யுத்தம் செய்ததால் பீஷ்ம பர்வா என்றும், அதேபோல் துரோண பர்வா என்றும், கர்ண பர்வா என்றும், சல்ய பர்வா என்றப் பெயர்களுடன் யுத்தம் முடிந்தது.

கே: த்ருதராஷ்டிரன் யுத்தரங்கத்திற்கு வந்தானா? தன் புத்ரர்கள் வெற்றி பெற அவா கொண்டவன் அல்லவா அவன்?

ப: வேதவ்யாஸர் கருணையோடு அவனுக்குக் கண்ணைத் தருவதாகக் கூறியும் அவன் அதை விரும்பாமல் போகவே, ஸஞ்ஜயனுக்குப் போரில் நடக்கும் ஸகல விஷயங்களையும் அறிந்து கூறும்படியான ஸர்வக்ஞ சக்தியைத் தந்தார். அவர் மூலம் அன்றன்று நடந்ததைக் கேட்டான்.

கே: முதலில் போர் எப்படி ஆரம்பமாயிற்று?

ப: தர்மராஜன் தேரிலிருந்து இறங்கிவந்து பீஷ்மர், துரோணர், க்ருபர் முதலியவர்களை வணங்கினதும் போர் ஆரம்பித்தார்கள்.

---

இப்போது நம் சிற்றறிவிற்கெட்டிய ஜீவன்முக்தர் ஒருவரே

கே : ஆஹா! இதல்லவா தர்மம்! பீஷ்மர் முதல் நாள் போரில் எந்த எந்த வீரனைக் கொன்றார்?

ப : விராட புத்ரனான உத்தரகுமாரனையும், ச்வேதனையும் எண்ணிறந்த ஸேனைகளையும் கொன்றார்.

கே : இரண்டாவது நாள் என்ன நடந்தது?

ப : பீஷ்மர் அர்ஜுனனோடும், துரோணர் த்ருஷ்டத்யும்னனோடும் யுத்தம் செய்தனர். பீமன் களிங்க ராஜனுடன் சேர்ந்து யுத்தம் செய்து அவனைக் கொன்றான்.

கே : மூன்றாவது நாள் என்ன நடந்தது?

ப : அர்ஜுனன் பீஷ்மருடன் எல்லோரும் ஆஶ்சர்யப் படும்படி மிக பயங்கரமாக யுத்தம் செய்தான். பீஷ்மர் ஒருவாறு உள்ளூர அவனது வீர்யத்தைக் கண்டு மகிழ்ந்தாலும், போர் வீரன் என்ற முறையில் எண்ணிறந்த பாணங்களை வர்ஷித்து அர்ஜுனனைப் பயப்படும்படிச் செய்தார்.

கே : பீஷ்மர் அர்ஜுனனைவிட எவ்வளவோ வயதான கிழவரல்லவா?

ப : வயதானவராயினும் பிரம்மச்சர்ய நியமத்துடன் பரசுராமர் முதலியவரிடம் வில்வித்தைக் கற்று, தேவர்களிடம் ஆசீர்வாதம் பெற்றவர். ஆதலால் பகவானையே ஆயுதம் எடுக்கும்படிச் செய்தார்.

கே : ஆஶ்சர்யம்! அது எப்படி? க்ருஷ்ணர்தான் ஆயுதம் எடுப்பதில்லை என்று ப்ரதிக்ஞை செய்தாரே?

ப : அர்ஜுனனையும் திணறும்படியாக அடித்து அவன் ஸாரதியான பகவான்மீதும் பல பாணங்களை எறிந்தான்.

கே : அதற்காகவா பகவான் ஆயுதமேந்தினார்?

ப : இல்லை, அவருக்கு பலமான அடி விழுந்தது. அர்ஜுனனையும் அவனது ஸேனையையும் அன்றே கொன்று குவிப்பார்போலிருந்தது. ஆதலால் தனது சக்ராயுதத்தை வரவழைத்து தேரிலிருந்து குதித்துச் சென்று பீஷ்மரைக் கொல்பவரைப் போல் அவரிடமோடினார்.

---

**எவரும் எந்தவிதமான குற்றமும் காணமுடியாத க்ஞானி**

## 2. தில்லைவாழ் அந்தணர்.

(சிதம்பரம் தீக்ஷிதர்கள்.)

புண்டரீகபுரம் எனும் தில்லைவனத்தில் வஸிக்கும் மஹரிஷிகள் நடராஜனது தொண்டர்களாவர். நடராஜனது பூஜையும் ஸேவையுமே பெரும் தவமாகப் பூண்டவர். நான்கு வேதங்களையுமறிந்து கார்ஹபத்நியம், தக்ஷிணாக்னி, ஆஹவனீயம் என்ற மூன்று அக்னிகளில் சிவனை நாடி வேள்வி புரிபவர்கள். வேள்வி செய்தல், செய்வித்தல், மறை ஓதல், ஓதுவித்தல், தானம் செய்தல், வாங்குதல் ஆகிய ஆறு கர்மாக்களை நித்யம் தவருமல் செய்பவர்கள். தெய்வபரம்பரையாக வந்தவர் என ப்ரஸித்தமானவர். அளவு கடந்த இவர்களது பெருமை பகவான் ஆரம்பித்துக்கொடுத்த "தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" என்ற பதிகத்தினுலேயே நன்கு விளங்கும். த்ரிகூடமலையில் ஹேம ஸபையில் ஸ்ரீ மூலலிங்கமும் சிவகங்கை கரையில் சிவகாமியு மிருக்கும் இடத்திலிருந்து ஹிரண்யவர்மன் மூவாயிரம் பக்தர்களுடன் சிதம்பரத்திற்கு அழைத்துவந்தார்.

தீக்ஷையே முக்திஸாதநம்.

## 3. திருநீலகண்ட நாயனுர்.

சிதம்பரக்ஷேத்ரத்தில் குயவர்வம்சத்தில் ஓர் சிவபக்தரிருந்தார். விஷத்தை விழுங்கி கழுத்தில் வைத்து நீலகண்டரென்றபெயர்பெற்ற சிவன் பெருமைஒன்றையே புகழ்வார். ஆதலால் இவருக்கே திருநீலகண்டர் என பெயர் வழங்கலாயிற்று. அவர் ஒருநாள் ஒரு தாஸி வீட்டிற்குச் சென்று வந்தார் என அவர் மனைவி, திருநீலகண்டம் ஆணையாக எம்மை தொடாதீர் என்றுர். அன்று முதல் அவர் எந்த ஸ்திரீயையும் தொடாமல் மனைவியை மாதாவைப் போல் கருதி சிற்றின்பத்திலீடுபடவில்லை ஆனுல் ஸதி பதி போல் வாழ்ந்து வந்தனர். இவர்களது நிலையை உலகிற்கு எடுத்துக்காட்ட விரும்பினுர் இறைவன். ஒருநாள் சிவன் சிவயோகி வேடம் பூண்டு இவர் வீட்டிற்கு வந்து ஒரு மண் ஓட்டை திருநீலகண்டரிடமளித்து பொன்னிலும் சிறந்த இதை ஜாக்கிரதை

யாக வைத்திருந்து நான் வந்து கேட்டபொழுது என்னிடம் கொடு என்று சென்ருர்.

சிலநாள் சென்றபின் அவ் வோட்டை மறைத்து விட்டு பகவான்சிவயோகியாகவே வந்து அவ்வோட்டைக்கேட் டார். அதைத் தேடியும் காணுமல் அதற்குப் பதில் அழகிய நல்லதோர் ஓட்டை அல்லது பொருளைத் தருவ தாகக் கூறியும் அவரவை களை மறுத்து, நீ ஓட்டைத் திருடவில்லை என உன் மனை வியின் கையைப் பிடித்துக் கொண்டு நீரில் மூழ்கி ஸத்யம் செய் என்ருர். அவளைத் தொடுவ தில்லை என்று ஏற்கனவே ஸத்யம் செய்திருப்பதால் அப்படிச் செய்ய மறுத்தார். சிவ யோகி திருநீலகண்டனை அழைத்துக்கொண்டுதில்லை வாழ் அந்தணரிடம் இவ் வழக்கைக் கூறி தீர்ப்பு கோரினர்.

அவர்கள் நீ ஸத்யம் செய் யத்தான் வேண்டும் எனக் கூறவே நேராக அவளைத் தொடாமல் ஒரு தண்டத் தின் நுனியை மனைவியும் மற்ருேர் நுனியை இவரும் பிடித்து நீரில் மூழ்கி எழுந் தார்கள். சிவயோகி மறைந்து வ்ருஷபாரூடராக, காக்ஷியளித்து மிகக் கிழவ ரான நீலகண்ட தம்பதிகளை இளமையாக்கி கைலாயத் திற்கழைத்துச் சென்ருர்.

அந்த இடம் சிதம்பரத்தில் ‘இளமையாக்கினர்கோவில்’ என வழங்கப்பட்டு அந்த ஐதிஹ்யம் நடத்திக் காட்டப் படுகின்றது. ஸத்யமே சிவன்.

## 4. இயற்பகை நாயனர்.

(ஸ்வபாவரிபு.)

சோழநாட்டிலே காவிரிப் பூம்பட்டிணத்திலே இயற் பகை என்ற ஒரு வைச்ய ரிருந்தார். ஸ்வபாவமான உலக ஸுகத்திற்கு அவர் பகைவர். ஆதலின் அப்பட் டப்பெயர் பெற்ருர். சிவ பக்தியிலும் அடியார் அன் பிலும் இணையற்றவர். இவ ரது கையில் உள்ள எதை யும் இல்லை என்று கூருமல் எவர்க்கும் விசேஷமாக சிவனடியார்க்கும் அளித்து வந்தார். இவரது பெருமை யை விளக்கி நற்கதியளிக் கக் கருதினர் சிவனர். ஒரு நாள் சிவயோகி வேடம் பூண்டு அவரிடம் வந்து “நீ, யார் எதைக் கேட்டாலும் கொடுப்பீராம்! அது உண் மைதான ? அப்படியானல் நான் கேழ்ப்பதை மறுக்கா மல் கொடுப்பீரா ?” என் ருர். என்னிடமுள்ள

---

பகைவனிடமும் த்வேஷமில்லாதவர்.

பொருளை நிச்சியமாக அளிப்பேன்! என்று அவர் கூற, ஆனால் உமது மனைவியை எனக்கு அளியுமென்ருர். அவர் சிறிதும் சஞ்சலப்படாமல் மனைவியிடம் சென்று இதைக்கூற அவள் முதலில் "என்ன விந்தை! என சிந்தை நொந்தாள். அடுத்த க்ஷணத்தில் அகமுடையான் சொல் வேதவாக்கு! நான் அவர் பொருள்! ஆதலின் கவலை என்ன? என்று அப்படியே ஆகுக! என்ருள்.

சிவயோகியும் இயற்பகையை அழைத்து, நீ அளித்தாலும் உன் உறவினர் அதை ஏற்கார்! நீ நான் வீடு செல்லும் வரை காவலாக வர வேண்டுமென்ருர். அங்ஙனமே ஆயுத மேந்தி அவ்விருவர்களையும் தொடர்ந்து அவர் செல்லும் பொழுது சிலர் வியந்தனர்! சிலர் சினம் கொண்டனர்! சிலர் பித்தன் என்றனர்! எங்குமில்லா வழக்கம்! அதர்மம்! அக்ரமம்! ஆதலின் அவனை விடோமென அனைவரும் அவ் விருவரையும் தடுத்து அவர் மனைவியை பிரித்துச் செல்ல முயன்றனர். இயற்பகை அவர்களோடு போர் புரிந்து அவர்களை வெட்டிக் கொன்று "அவளை அழைத்துச்செல்லலாம்" என்ருர். இதைக் கண்ட சிவயோகி உமா ஸமேதனைத் தோன்றி இறந்தவர்களை எழுப்பி இவர்களுடன் எல்லோருக்கும் கைலாஸமளித்தார்.

**தாநமே சிறந்த தவம்.**

## 5. இளையான்குடிமார நாயனர்.

**(இளாநந்தகுடீர மாரர்)**

இளையான்குடி என்ற ஊரில் உழவாளிகளின் குலத்தில் மாரனர் என்பவர் தில்லை நடராஜனிடம் பேரன்பு கொண்டவர். அடியாருக்கு அன்ன மளிப்பதில் அலாதியான அவா இவருக்கு. சிவனடியார்களை வரவேற்று சிறந்த முறையில் பூஜிப்பார். அவரது அன்பைக்கண்டு அனைவரும் வந்து ஸேவிப்பர். அள்ளியள்ளி அளித்துவரும் செல்வமெல்லாம் குறைந்து கடன்வாங்கியும் உபசரித்து வந்தார். ஒருநாள் நள்ளிருளில் கடும் மழை பொழிய பத்னியுடன் படுத்துறங்கும் மாரன் வீட்டிற்கு ஓர் விருந்தாளி வந்தார். தம்பதிகள் அவரை வரவேற்று ஆடையளித்து குளிர் நீக்கி உணவுக்கு என் செய்வதென்று ஏங்கினர்.

---

**குறித்த பலனை அவரிடம் அடையாதவர் குறை கூறலாம்.**

உற்ற துணையும் உயர் மந்திரியுமான மனைவி கூறியவண்ணம் காலையில் கழனியில் விறைத்த விதைகளை அள்ளிவந்தார். அதை கழுவி வீட்டிற் கூறையிலிருந்த மூங்கில்களைப்பிடுங்கி அதைஅன்னமாக்கிபசியால் வாடி உறங்கும் விருந்தினரையழைக்க அவர் மறைந்து ஜ்யோதிர்மயமான கைலாஸநாதராகக் காக்ஷி யளித்தார். ஒப்பற்றதான உனது தான தர்மங்களுக்கு மெச்சினேம்! குபேரனே உனக்குத் தொண்டுபுரியும் ஸேவகன் ஆவானெனக் கூறி கைலையங்கிரிக்கு அழைத்துச் சென்றார். **உணவளிப்பவர் உயிரளிப்பவராவர்.**

## 6. மெய்ப்பொருள் நாயனர்.

### (ஸத்யார்த்தர்.)

தென்பெண்ணை யாற்றங் கரையின்மீது திருக்கோவிலூரில் **ஸத்யார்த்த நாதன்** எனும் சிவபக்தியிற் சிறந்த அரசன் ஒருவனிருந்தான். அவனுக்கு முக்தநாதன் என்றோர் பகைவனுண்டு. பலமுறை தோல்வி யடைந்தவன். ஸத்யார்த்த நாதன் பொய்யான உலக இன்பத்தைவிட்டு மெய்யான சிவனடியிலே ஈடுபட்டவன். சிவபக்தரை அர்ச்சிப்பான். சிவபக்த வேடந்தாங்கி ஏகாந்தத்தில் அவனைக் கபடமாகக் கொல்வது என எண்ணினன் எதிரி. திருநீர் ருத்ராக்ஷமணிந்து, சிவாகமம் என்று கூறிய கத்தியை பட்டாடையில் கட்டிவந்தான். அரசனரண்மனையில் சிவபக்தர் புகத் தடையில்லை. ஆதலின் உள்ளே நுழைந்தான் முக்தன். அரசனவரை வரவேற்று அர்ச்சிக்கும் பொழுது, பாபி கத்தியால் குத்தினன். அவர் காவலாளியை அழைத்து, இவன் பகைவனயினும் சிவபக்தர் வேடந் தாங்கியவன். ஆதலின் இவனை எவரும் ஹிம்ஸிக்கா வண்ணம் ஊரைத் தாண்டிகொண்டுவிடுஎன்று உயிர் துறந்தார். இவரது பக்தியைக் கண்டு பரமசிவன் இவரைக்கொண்டாடி திவ்ய தர்ஶநம் தந்து கைலைக்கு அழைத்துச் சென்றார். **சிவனே ஸத்யமான பொருள்.**

---

*உண்மையான க்ஞானியின் லக்ஷணமுள்ள க்ஞானி.*

மஹாபாரதப் பூஞ்சோலை.

# பாரதத்தாய்

பாரதகேஸரி ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள்.

பாரதம் ஒரு கதை. நல்ல பாத்திரங்களை அமைத்து வ்யாஸ முனிவர் இதை நல்ல திறமையுடன் வெளியிட்டிருக்கிறார். படிக்கவும் கேட்கவும் ருசியாக இருக்கிறது. இந்த எண்ணத்துடன் மாத்திரம் மஹாபாரதம் எனும் இதிஹாஸத்தை நாம் அறியலாகாது. உலக நோக்குக்கு அப்பாற்பட்ட, சில விசித்திர சம்பவங்கள் நம் புத்தியைக் குழப்பும். மிகமிகத் தொன்மையான, பல கல்பங்களில் நடைபெற்ற தேவ மனுஷ்ய ரஹஸ்யங்களைத்தான் இந்த சரித்திரத்தில் துணிவுடன் வெளியிட்டு, அதன் மூலம், உலகத்தின் கதியையும், அதை இயங்கும் சக்திகளின் பிரிவும், தோற்றமும் செய்கைகளையும் காட்டி, அவைகளுக்கும் மேலான பரமனின் லீலையை வெளிப்படுத்தவே அவாவுற்று, அதனால் எல்லோரும் உய்யுமாறு அருள்பாலித்துள்ளார்.

யமுனை நதிக்கரையில் ஸத்யவதி என்ற படகோட்டிப் பெண் அமர்ந்திருந்தாள். அவளிடம் தெய்வீக அழகு நிறைந்திருந்தது. அத்துடன் அவளுடல் நாற்றம் பிறர் சகிக்கமுடியாத வண்ணம் வீசியது. அவளை மத்ஸ்யகந்தி என்று எல்லோரும் அழைப்பர். ஒருசமயம் பராசரர் என்ற மாமுனிவர் அங்கு வந்துற்றார். விரைவில் அக்கரை செல்ல விரும்பியவர் வேறு யாரையும் அங்கு காணாததால் இப்பெண்ணையே படகோட்டித் தன்னை அக்கரையில் சேர்க்கச்சொன்னார். இவளும் மிகப் பணிவுடன் அப்பணியை ஏற்றாள். படகு நகர்ந்தது. தன் எதிரே உள்ள எழில் நங்கையின் தெய்வீக அழகைக் கண்டு வியந்து பரவசமானார் பராசரர். அதேசமயம் இப்பெண் யார் என்பதையும் தன் யோக மஹிமையைக் கொண்டு ஆராய்ந்து தெளிந்தார். 'பெண்ணே, ஸத்யவதீ! இன்று உன்னை நான் விவாஹம் செய்துகொள்ள விரும்புகிறேன். உன்மூலம் ஒரு மஹா புருஷனைத்

---

***அவர் யார்? உங்கள் மனதே பதில்கூறும்,***

தோற்றுவிக்கப்போகிறேன். நீ செம்படவப்பெண் அல்ல. அவனால் வளர்க்கப்பட்டாய். உன்னுடைய மஹிமையை நீ அறியாய். பித்ருதேவர்களில் மிகுந்தபெருமை பெற்ற வர்கள் பர்ஹிஷதர்கள் என்ற பூர்வ பித்ருக்கள். அவர் களின் மானஸீக சக்தி, "அச்சோதம்" என்ற நிர்மல மான தேவதடாகத்தில் உன்னை எழுப்பியது.

பிறந்ததும், உன் பெற்றோரைக் காணாமல், அலைந்த உன்னை 'அத்ரிகா' என்ற ஓர் அப்ஸரஸ் வளர்த்தாள். அவளுடனே நீ இருந்தாய். ஒரு சமயம், விமானத்தில், 'உபரிசரவஸு' என்ற ஓர் அரசன் சென்றுகொண்டிருந் தான். அவனைக் கண்டு அத்ரிகா மோஹித்தாள். நீயும் அவனைத் தந்தை என்று அழைத்தாய். இந்தத் தவறு காரணமாக, உன்னுடன் இயல்பாகத் தோன்றின தேவத் தன்மை மறைந்து புவியில் ஜனிக்கவேண்டியதாயிற்று. 'அத்ரிகா' என்ற அந்த அப்ஸரஸ் யமுனை சங்கமத்தில் ஒரு மீனாகவும், நீ அவள் வயிற்றில், தவறி விழுந்த வஸுவின் வீரியத்தினால் ஒரு பெண்ணாகவும் உருவெடுத் தாய். உன்னுடன் அந்த மீனுடலில் ஒரு சகோதர னும் ஜனித்திருக்கிறான். இந்த மீனைப்பிடித்த செம்பட வர் தலைவன், அதன் வயிற்றில் கண்ட ஆண் குழந்தை யையும், பெண் குழந்தையையும், அரசனிடம் ஸமர்ப் பிக்க, அரசன் ஆண் மகவைத் தான் வளர்க்க விரும்பி, பெண் மகவை செம்படவனுக்குத் தந்துவிட்டான். இதுவே உன் பிறவியின் ரஹஸியம். உன் மாசிலாதத் தன்மையை மீன்நாற்றம் என்ற போர்வை கார்த்து வரு கிறது. என்போன்ற யோகிகளுக்குப் பார்வை தவத்தினா லும், உள்நோக்காலும், மூன்று காலங்களையும் கடந்தும் காணவல்லது. இன்று கண்டேன் உன்னை. உன் மூல மாக இந்த பாரதத்தைப் பாதுகாக்கும் ஓர் ஞான சூரியனை உதிக்கச் செய்யப் போகிறேன். "ஹே ஸத்யவதி, இந்த யமுனைத்திட்டில் படகை நிறுத்து. என்னை விவாகம் செய்துகொள், எழுந்திரு" என்றார்.

---

*திருமூலஸித்தர் சிதம்பரத்திலேஸித்தி (திருமந்த்ரகர்தா)*

நாணமும், பயமும், வியப்பும் அடைந்த அப்பெண் பாவை அடுத்த கணத்தில் தன்னுடலில் பீடித்த துர் நாற்றம் மறைந்ததை அறிந்தாள். ஓர் யோசனை தூரம் வீசும் பரிமள மணம் தன்னிடம் மேவியதையும் உணர்ந் தாள். சுற்றிலும் திரையிட்டதுபோல பனிப்படலம் உண்டாகியது. அங்கு இரு தெய்வீக சக்திகளின் விளை வாய் யோகத்தின் சுடரென ஒரு பாலகன் தோன்றினன். தோன்றியதும், ஏழு பிராயம் எய்தி நின்றான். தாயை யும் தந்தையையும் வணங்கி விடைபெற்றுத் தவநெறி சென்றான். ஸத்யவதியும் பிள்ளைப்பேறு அடைந்தாலும், பராசரரின் தவவலிமையால் மறுபடி புனிதமான கன் னிகாபாவத்தைப் பெற்று, முன்போல செம்படவன் பெண்ணாகவே திரும்பினாள். இந்த அரிய சேர்க்கையை உலகம் அறியாது; புரிந்தும்கொள்ளாது. அதில் உதித்த "வித்தகன் த்வைபாயனன்" (தீவில் அடைந்தவன்) பின்னர் வேதங்களை வகுத்தளித்த 'வ்யாஸமுனி' யே யாவன். அவனால் உலகம் நன்னெறியில் உய்ந்தது.

இதை அறியப்பெற்ற பீஷ்மர் பின்னர் பெருமைபட முழக்கம் செய்கிறார். இவளே காளிகாதேவி என்றும் பாரதத்தின் தாய் என்றும் போற்றுகிறார்.

## ஸ்ரீ பரமாசார்யாளின் அமிர்த மொழி.

பிறவாமல், இறவாமல் இருப்பதே மோக்ஷம். காஞ்சீபுரத் தில் பிறவாத் தானம், இறவாத் தானம் என இரு கோவில்கள் இருக்கின்றன. திருவாரூரில் பிறந்தால் முக்தி, அருணாசலத்தை நினைத்தால் முக்தி, சிதம்பரத்தை தர்சித்தால் முக்தி, காசியில் இறந்தால் முக்தி.

சிவபக்தனுக்கு விஷ்ணு சிவலிங்கமாகி தர்சநம் தந்ததாக பாலாற்றங் கரையிலுள்ள ஒரு க்ஷேத்ரத்தின் ஸ்தலபுராணம் கூறுகிறது. அபேதத்தைக் காட்ட அப்பய்யதீக்ஷிதர் ரத்நத்ரய பரீக்ஷை என ஒரு க்ரந்தமியற்றினார். சிவபக்தர்கள் விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் செய்கின்றனர்.

ஆசார்யாள் சிவாநந்த லஹரி, பஜகோவிந்தம், ஸௌந்தர்ய லஹரி, ராம, சூரியன், குஹன், விநாயகர் ஆகியவர்களின் ஸ்துதி எழுதினார். ஆறுமதங்களை ப்ரதிஷ்டை செய்தார். ஆனால் அவர் அத்வைதி.

P. சுப்ரமண்யன், கடகம்.

## பஜனையும் கானமும்.

தியாகோப நிஷத்.

ஸத்கதாம்ருத கலாநிதி, ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள்.

இந்த தனுர்மாதத்தில் எங்கும் பஜனைமயமாக இருக்கிறது. சென்னையில் கான மழை பெய்துகொண்டிருக்கிறது. அதன் ப்ரதித்வனி அவரவர் வீடுகளில் வானொலியின் மூலமாக அனுப விக்கப்படுகிறது. பஜனையில் ஈடுபட்டவர்கள் கானத்தில் அதிக கவனம் செலுத்துவது இல்லை. கானத்தில் வல்லவர்கள் பஜனை வழி போவதில்லை. இதன் அருமையை ஸ்ரீஸ்வாமிகள் கீழ்க்கண்ட கிருதியின் மூலம் ஸ்ரீ ராமபிரானிடம் தெரிவித்துக்கொள்ளுகிறார்.

ராகம்—நாயகி] பல்லவி. [தாளம்—ஆதி

நீ பஜன கான ரஸிகுல
நேனெந்து கான ரா ராம— (நீ)

அனுபல்லவி.

ஸ்ரீ பவ ஸரோஜாஸனுதி சசீ
மனோ ரமண வந்த்ய இலலோ— (நீ)

சரணம்.

ஸகுண நிர்க்குணமுல நிஜமுதப்பரல
ஷண்மதமுல மர்ம மஷ்ட ஸித்துல
வகலு சூப ஸந்தஸில்ல கண்டினி
வரானன தியாக ராஜ வினுத— (நீ)

பொருள் :—

*பல்லவி :* ஸ்ரீ ராம, உன்னுடைய நாம பஜனை, உன் குணங்களைக் கானம் செய்வது, இந்த இரண்டு ரஸங் களையும் கலந்து அனுபவித்தவர்களை நான் இவ்வுலகில் எங்கும் கண்டதே யில்லை.

***அனுபல்லவி :*** பரமசிவன் (பவன்), நான்முகன் (ஸரோஜாஸனன்), இந்திரன் (சசீரமணன்) இவர்களால் துதிக்கப்படுகிற ராமா! (இவர்கள் அந்த ரஸத்தை அனுபவித்திருப்பார்கள் அன்றோ?)

***சரணம் :*** ஸகுணோபாஸனை (திவ்ய நாம பஜனை) நிர்க்குணோபாஸனை (ப்ரம்மீ பாவனை) இவைகளில் எது உகந்தது என்ற உண்மையையோ அல்லது அதன் மற்றொரு வாதத்தையோ, ஆறு மதங்களின் ரஹஸ்யத்தை

---

கும்ப முனி அநந்தசயநத்திலே.

யோ, அஷ்டாங்க யோக ஸித்தியையோ அறிந்து, அதன் வழிப்படுகிறவர்கள் என்ன ரஸத்தை அனுபவிக்கப் போகிறார்கள்? ஸகல தத்துவங்களையும் உன் அழகு வாய்ந்த முக தரிசனத்தில் பெற்றுவிடலாமே? இதை நினைந்து உருகி இந்த தியாகராஜன் உன்னைப் போற்றிய வண்ணம் இருக்கிறேன்.

கருத்து: பஜனையும், கானமும் வேறல்ல. ஸுஸ்வரமான கானத்துடன் பகவன் நாமாவை பக்தியுடன் பஜிப்பவன், பகவானைத் தரிசிக்கிறான். பகவத் தரிசனம் பெற்றவர்க்கு அதைத் தவிர வேறு ருசி என்ன இருக்கிறது? அதை யடையும் வரை, கான பஜனை, அவன் நினைவில் அந்த ஆனந்தத்தை அளிக்கக் கூடியது.

## குமதி ஸுமதி ஸம்வாதம். மாதர் பகுதி.

**கௌண்டின்யன்.**

**குமதி:** ஸாரஸ்வதீ பூஜையை ஆயுதபூஜை என்று அழைக்கின்றார்களே, காரணமென்ன?

**ஸுமதி:** கல்வி, கடவுளைக் காண்பதற்காகக் கற்கவேண்டும் என்ற உயர்ந்த லக்ஷ்யம் அகன்றது. ஜீவனத்திற்காக கல்வி கற்பது என்று மட்டமான எண்ணமுண்டாயிற்று.

**கு:** சரி, சரி, கல்வியைக் கொண்டு ஜீவிப்பவர் புத்தகங்களை பூஜிப்பதுபோல் ஆயுதங்களைக்கொண்டு ஜீவிப்பவர் ஆயுதங்களை பூஜை செய்வது நியாயமே. ஆனால் ஞானப்ரதிபந்தகமான அஸுரனை அன்னைக் கொன்றாள் என்றாயே, அதைவிரிவாகச் சிறிது கூறு.

**ஸு:** சுயநலம், அதற்காகப் பிறரை ஹிம்ஸிப்பது, தமோகுணம், சோம்பல், தானும் கெட்டு பிறரையும் கெடுப்பது என்பவை போன்ற அசுர ஸம்பத்தே மஹிஷாஸுரன் உருவாகக் கற்பிக்கப்பட்டது.

**கு:** எத்தனையோ உருவமிருக்க எருமை உருவம் வர்ணிக்கப்பட்டதன் விசேஷ தாத்பர்ய மென்ன?

**ஸு:** நன்றாகக் கேட்டாய்! அக்ஞானத்திற்கும் எருமைக்கும் மிகமிகப்பொருத்தம் இருக்கின்றது. தமோகுணம் கறுப்பு வர்ணமானது. எருமை அனைத்தும் கறுப்பே! எருமையின் சோம்பல் நடை, அநாசாரத்தில் ருசி, தன்னையும்

அசுத்தமாக்கி தன்னை அண்டியவரையும் அசுத்தமாக்கு வது என்பது அக்ஞானத்திற்கும் எருமைக்கும் ஸமமான குணங்கள்.

கு: சாக்கடையில் அல்லது தன் சிறுநீரால் நினைந்த தன் வாலை சாணியில் தோய்த்து தன் மீதும் அடித்துக் கொள் ளும். அருகில் வருவோரையும் அதனாலேயே அசுத்த மாக்கும். ஆதலால்தான் அக்ஞானத்தையும் எருமையை யும் ஒப்பிட்டாய் போலும்!

ஸு: நானாக இதை ஒப்பிட்டு பேசவில்லை. லலிதா ஸஹஸ்ர நாமாவில் இக் கருத்தை "अज्ञान ध्वान्तसंहत्री என்ற நாமா அக்ஞான இருளை நீக்குகின்றது என வர்ணிக் கின்றது. அன்றியும் ஜீவராசிகளுக்கு முடிவான லக்ஷயம் முக்தி என்பதையும் விளக்குகின்றது.

கு: முக்தியில் ஆரம்பித்து முக்தி என்று முடித்தாயே! அது யுக்தியாகவும் தோன்றுகிறது. பக்தியினால் பூஜை செய்தால் அல்லவோ இது எல்லாம் பொருந்தும்.

ஸு: நவராத்ரி ஒன்பது நாளும் பக்திதானே ப்ரதானம்? கொலு வைத்து சக்தி வடிவான பெண்களை யெல்லாம் அழைத்து கலாவடிவமான சக்தியை கானத்தினால் ஆராதிக்கும்படிச் செய்து பெண்களைச் சந்தன தாம்பூல பக்ஷயாதிகளால் பூஜிப்பது பக்தியல்லவா? அன்றியும் புருஷர்கள் வேத பாராயணம், இராமாயண பாராயணம், தேவீ பாகவத பாராயணம் முதலியவைகளால் அம்பிகையை அர்சிப்பது பக்தி அல்லவா?

கு: இதைப் பார்க்கும்பொழுது எனக்கு ஒரு எண்ணம் தோன்றுகிறது. இக் காலத்தவர் ஒவ்வொரு விஷயத்திற் கும் ஒவ்வொரு வாரவிழா கொண்டாடுகின்றார்களே! கல்வி வாரம்! தேசிய வாரம்! கொடிவாரம்! மிருகவாரம்! இவைகளுடன் மரியாதைக்குக்கூட ஒருவாரம் கொண்டாடு கின்றார்களே! அதேபோல் நவராத்ரி, கல்விவாரம், அலங் கார வாரம், வித்யாவாரம், கலைவாரம் முதலியவை எல்லா வற்றிற்கும் பொருந்தும்போல் இருக்கின்றதே!

ஸு: நீ எப்படி வேணுமானாலும் வைத்துக்கொள். நவராத்ரி பெண்களுக்குப் பெருமையை அளிக்கும் வ்ரதம். இது போல் வேறு எந்த தேசத்திலும், வேறு எந்த மதத்திலும் பெண்களின் பெருமைக்காக சிறந்த வ்ரதம் இல்லை.

# நவரஸம்.

"அக்ஷய பரணி"

## தூசி வீசியது !

"பார்த்த மாத்திரத்திலேயே புருஷார்த்தங்களைக் கொடுக்கும் மூர்த்தி, குருவாயூரில் கோவில்கொண்டிருக்கும் ஸ்ரீ க்ருஷ்ணன்."

இவ்வாறு பாடியவர் மஹா பண்டிதரான நாராயண பட்டத்ரி ஆவர். தீராத வாத நோயால் பீடிக்கப்பட்டு கதி வேறில்லை யென்று தெளிந்து குருவாயூரப்பன் சன்னதியில் வந்து விழுந்தார். எதிரே காணும் அப்பனின் மஹத்துவத்தையும் தன்னுடைய பரிதாப நிலையையும் நினைத்து நினைத்து விம்மினார்; கண்ணீர் ஆறாகப் பெருக்கினார்; நெஞ்சு உருகினார். அந்த உருக்கத்திலே உதித்தது 'நாராயணீயம்' என்ற மஹா காவ்யம். ஆயிரத்துக்கும் மேற்பட்ட ஸ்லோகங்களைச் செய்து முடித்த தருணத்தில், பகவான் சிலைவடிவிலிருந்து தனது திவ்ய ஸ்வரூபத்தை பட்டத்ரி அவர்களுக்குக் காட்டினார். அடுத்த க்ஷணத்தில் அவரைப் பீடித்திருந்த வாதநோய் பறந்து போய்விட்டது!

ஆச்சர்யம்! கலியில், சுமார் 700 வருஷங்களுக்கு முன்னால் இது நடந்தது என்றால் நாம் அதிசயப்படுகிறோம்! ஆமாம்! ஸ்ரீ பட்டத்ரி அவர்களே ஆச்சர்யப்படுகிறார். கவியல்லவா! அதைக் கவி நயத்தோடு வெளியிடுகிறார் ஒரு தனி ஸ்லோகத்தில்.

ஒன்றல்ல; இரண்டு அதிசயங்களாம். ஒன்று அவர் பூர்வம் கேள்விப்பட்டது; மற்றொன்று தானே ப்ரத்யக்ஷமாகப் பார்த்தது. பௌதிக ரீதியில் தூசிகள் சேரச்சேர சிறு மண்கட்டிகள் ஆகி, அவைகள் சேர்ந்து காலகதியில் கற்களாகிப் பிறகு குன்றாகிக் கடைசியில் மலையாகவே ஆகிவிடுகிறது. ஆனால் ஒரு அபூர்வமான இடத்திலிருந்து கிடைக்கும் தூசி, மற்றவைகளைப்போல சேரச்சேர ஒரு மலையாக உருவெடுப்பதற்கு பதிலாக ஒரு பெரிய மலையைக்கூடக் கரைத்து மண்ணும் இல்லாமல் செய்துவிடுமாம்! இதைத்தான் ஸ்ரீ பட்டத்ரி தான் கேள்விப்பட்ட முதல் அதிசயமாகச் சொல்கிறார்.

தானே அனுபவித்து அறிந்துகொண்ட இரண்டாவது அதிசயம் என்ன தெரியுமா? காற்று வீசினால் தூசிகள்

---

பறந்தே போகும். ஆனால் மேற்சொன்ன அதிசய தூசி வீச ஆரம்பித்தவுடன் காற்றல்லவா பறந்துவிடுகிறது. இந்த விந்தைகளையெல்லாம் செய்யும் தூசி எங்கு இருக்கிறது என்று கேட்கிறீர்களா? இதோ சொல்கிறார் பாருங்கள்!

पूर्वं तावदयि त्वदङ्घ्रि रजसां योगे रजो हीनता
लोकस्येति विचित्र मद्यतु पुनश्चित्रान्तरं दृश्यते ।
वातैः पांसुनिरास एव हि परं दृष्टस्त्वदीयाः पुनः
पादांभोरुह रेणवो विघघते वातस्य विद्रावणम् ॥

பூர்வம் தாவத$^3$யி த்வதங்க்$^4$ரி ரஜஸாம் யோகே$^3$ ரஜோ ஹீனதா
லோகஸ்யேதி விசித்ர மத்$^3$ய து புன: சித்ராந்தரம் த்$^3$ருஸ்யதே |
வாதை: பாம்ஸு நிராஸ ஏவஹி பரம் த்$^3$ருஷ்டஸ்த்வதீ$^3$யாப்புன:
பாதாம்பே$^4$ருஹ ரேணவோ வித$^3$த$^4$தே வாதஸ்ய வித்$^3$ராவணம் ||

அந்த தூசிகள் எவை? ஸ்ரீ குருவாயூரப்பனின் சரண கமலத்திலே காணக்கிடைக்கும் பாததூளிகள்தான் அவை என்று விளக்குகிறார் நாராயண பட்டத்ரி.

"ஹே க்ருஷ்ணா! ரஜோ குணத்தினாலும், (அது ஸம்பந்தத்தினால் உண்டாகும் தாபங்கள், பாபங்கள், ஸம்ஸார பந்தங்கள் இவைகளினாலும்) ஆன ஒரு பெரிய மலையை உன் பாததூளி ஒரு க்ஷணத்தில்கரைத்துவிடுமாம். விந்தைதான்! ஆனால் இதைத் தூக்கியடித்துவிட்டது நான் நேரில் கண்ட ஒரு அதிசயம். உன் பாததூளி என்மேல் வீச ஆரம்பித்தவுடன் என் சரீரத்தில் வேதனையை வீசிக்கொண்டு இருந்த வாயு (வாதரோகம்) ஓட்டம்பிடித்து விட்டதே!

"வாயு வீசித் தூசி பறப்பதற்கு மாறாகத்
தூசி வீசி வாயு அல்லவா பறக்கிறது!"

இவ்வாறு வியந்தவண்ணம் தான் அனுபவித்த அருளை - அந்தப் பாததூளியை - நாமும் உய்ய வேண்டி ஒரு ஆஸ்தியாகவே வைத்துப் போயிருக்கிறார் ஸ்ரீ பட்டத்திரி. அந்தப் பொக்கிஷத்தைத் தன்னுள் வைத்திருக்கும் பேழைதான் ஸ்ரீமன் நாராயணீயம்.

---

**கமலமுனி திருவாரூரிலே ஸித்தி பெற்றார்.**

## பாவம் ஸ்வாமி!

ஹரியின் மஹிமையைக் கண்டோம். இப்போது ஹரனையும் ஸ்மரிப்பது சிறந்ததல்லவா! அதற்குத் தானே மார்கழி மாதத்தில் திருப்பாவை, திருவெம் பாவை இரண்டையும் சேர்த்துப் பாடவேண்டுமென்று நமது ஆசார்யாள் கட்டளையிட்டிருக்கிறார்கள். வாருங்கள் குருவாயூரிலிருந்து கிளம்பி, சிதம்பரம் வந்துசேருவோம்!

சுமார் 400 வருஷங்களுக்கு முன்னால் திருவாதிரைத் திருநாளன்று, விடியற்காலை வேளையில் சிதம்பரம் கோவில் ஆயிரக்கால் மண்டபத்தில் ஆடும் கூத்தனுக்கு அபிஷேகம் நடந்து கொண்டிருக்கிறது. மக்கள் கூட்டத் தைப்பற்றிச் சொல்லவா வேண்டும்! அன்று மற்றொரு விசேஷம்! அந்த பக்த கோடிகளுக்கிடையே மஹான் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரர் அவர்கள் தரிசனம் செய்துகொண்டு நிற்கிறார்கள். அபாரமான ஸரஸ்வதி விலாஸத்தினால் நூற்றுக்கணக்கான கிரந்தங்களையும் வியாக்யானங்களையும் இயற்றி நமது மதத்திற்கும் ஸம்ஸ்கிருத பாஷைக்கும் அழியாத் தொண்டு செய்தவர் இவர்; அதற்கெல்லாம் மேலாகத்தானே ஏற்படுத்திக்கொண்ட சித்த ஸ்வாதீனமற்ற நிலையிலும் கூடத் தன் மனம் சிவனை விட்டு விலகாது என்று சோதித்துத் தெளிவடைந்த சிவ பக்த சிரோன்மணியும் இவரே ஆவர்.

ஒன்றன் பின் ஒன்றாக அபிஷேகங்கள் நடைபெறு கின்றன. திவ்யமான சந்தன அபிஷேகம் அடுத்தது. 'ஹர, ஹர' என்று பக்தர்கள் பரவசமாய்க் கோஷ மிடுகிறார்கள். ஆனால் தீக்ஷிதர் அவர்கள் ஏதோ ஒரு தீவிரமான சிந்தனையில் ஈடுபட்டிருப்பவர் போல் தோன்றினார். காரணம் என்னவோ என்று மற்றவர்கள் யோசிக்கு முன்னர், அதோ அவரே தன் எண்ணங்களை ஒரு ஸ்லோகத்தின் மூலமாக வெளியிடுகிறார்; வாருங் கள், கேட்கலாம்!

**मौलौ गंगाशशांकौ करचरणतले शीतलांगा भुजंगाः**
**वामे भागे दयार्द्रा हिमगिरितनया चन्दनं सर्वगात्रे ।**
**इत्थं शीतं प्रभूतं तव कनकसभानाथ वोढुं क्व शक्तिः**
**चित्ते निर्वेदतप्ते यदि भवति न ते नित्यवासो मदीये ॥**

---

போகநாதர் பழனியிலே ஸித்திபெற்றார்.

மௌளௌள கங்கா ஶஶாங்கௌ
கரசரணதலே ஶீதலாங்கா புஜங்கா:
வாமே பாகே தயார்த்ரா ஹிமகிரிதனயா
சந்தனம் ஸர்வ காத்ரே ।
இத்தம் ஶீதம் ப்ரபூதம் தவகனகஸபாநாத
வோடும் க்வ ஶக்தி:
சித்தே நிர்வேத தப்தே யதி பவதி ந தே
நித்ய வாஸோ மதீயே ॥

ஹே, கனக சபேசனே ! இந்த மார்கழி மாதக் குளிரில் விடியற்காலே வேளையில் உன்மேல் சந்தனத்தைக் கொட்டுகிருர்களே ! இது நியாயமா ? ஏற்கெனவே நீ உன் ஜடையின் மேல், பனி நீர் பெருகி ஓடும் கங்கையை வைத்திருக்கிருய் ! அதன் பக்கத்தில் சீதளமே உருவாகிய சந்திரன் வேறு. போதாக்குறைக்கு உன் அங்கமெல்லாம் 'ஜில்' என்று இருக்கும் நாகங்கள். ( பாம்பின் உடம்பு மிகவும் சீதளம் என்று சொல்லுகிருர்கள். பேசாமல் ஒப்புக்கொள்வோம்; பரீக்ஷிக்க வேண்டுமென்ருல் பாம்பைத் தொட்டல்லவா பார்க்கவேண்டும்!) அதுவுமல்லாது, பனியின் உரைவிடமான இமய மலேயின் பெண் உன் உடம்பின் பாதியை ஆக்கிரமித்துக் கொண்டாள். இவையெல்லாம் போதாதென்று, சந்தனக் குழம்பை உன் மேனியெல்லாம் குளிர அபிஷேகம் செய்கிருர்களே ! இது அடுக்குமா ! என் அப்பனே ! இத்தனே குளிர்ச்சியை நீ எப்படித் தாங்குவாய் ?

பிழைத்திருக்க ஒருவழி சொல்கிறேன் கேள்! ஓயாத வேதனேகளால் என் சித்தம் சதா நெருப்புப்போல் கொதித்துக் கொண்டிருக்கிறது ! குளிர் காய வசதியாக இருக்கும் என் மனத்திலே நீ வந்து தங்கி விடு !

அப்படித் தங்கினுல் ஈஸ்வரன் பிழைத்துக் கொள்வான் என்று வேடிக்கையாக யோசனே சொன்ன தீக்ஷிதரின் நிஜமான அபிப்பிராயம் என்ன ? " என் உள்ளே நீ புகுந்து விட்டால், என் சித்தமே சிவமாகும். நான் பிழைத்துக் கொள்வேன் " என்பது தானே !

---

**மச்ச முனிவர் திருப்பரங்குன்றத்திலே**



# நவக்ரஹ ஸ்தோத்ரம்.



[ இதை நித்யம் பாராயணம் செய்ய அரிஷ்டமகலும். ]

### சூர்யன்.

**जपाकुसुमसंकाशं काश्यपेयं महाद्युतिम् ।**
**तमोरिं सर्वपापघ्नं प्रणतोऽस्मिदिवाकरम् ॥**

*ஜபாகுஸுமஸங்காசம் காச்யபேயம் மஹாத்யுதிம் ।*
*தமோரிம் ஸர்வபாபக்னம் ப்ரணதோ஽ஸ்மி திவாகரம் ॥*

செம்பருத்திப்பூவின் நிறமுடையவரும், காச்யபமஹரிஷி புதல்வரும், மஹாப்ரகாச முடையவரும், இருளுக்கு சத்ருவும், எல்லா பாபங்களையும் போக்கடிப்பவருமான சூர்யனை வணங்குகிறேன்.

### ஸோமன்.

**दधिशङ्ख तुषाराभं क्षीरोदार्णव संभवम् ।**
**नमामि शशिनं सोमं शंभोर्मुकुट भूषणम् ॥**

*ததிசங்க துஷாராபம் க்ஷீரோதார்ணவ ஸம்பவம் ।*
*நமாமி சசினம் ஸோமம் சம்போர் முகுட பூஷணம் ॥*

தயிர், சங்கு, பனி இவைபோல் வெளுத்தவரும், பாற்கடலிலுதித்தவரும், சிவனின் சிரோபூஷணனும், அமுத ஸ்வரூபியுமான சந்திரனை நமஸ்கரிக்கிறேன்.

### அங்காரகன்.

**धरणी गर्भसंभूतं विद्युत्कान्ति समप्रभम् ।**
**कुमारं शक्तिहस्तं च मङ्गलं प्रणमाम्यहम् ॥**

*தரணீ கர்ப்ப ஸம்பூதம் வித்யுத்காந்தி ஸமப்ரபம் ।*
*குமாரம் சக்திஹஸ்தம் ச மங்களம் ப்ரணமாம்யஹம் ॥*

பூமியின் புதல்வரும், மின்னல் போன்ற காந்தியுடையவரும், வேலை கையில் வைத்திருப்பவரும், குமாரருமாகிய அங்காரகனை வணங்குகிறேன்.

### புதன்.

**प्रियङ्गु कलिकाश्यामं रूपेणाप्रतिमं बुधम् ।**
**सौम्यं सौम्यगुणोपेतं तं बुधं प्रणमाम्यहम् ॥**

*ப்ரியங்கு கலிகாச்யாமம் ரூபேணாப்ரதிமம் புதம் ।*
*ஸௌம்யம் ஸௌம்யகுணோபேதம் தம்புதம்ப்ரணமாம்யஹம்*

ப்ரியங்கு எனும் புஷ்பமொட்டு போன்ற ச்யாம நிறமுடையவரும், ஒப்பற்ற உருவமுடையவரும், வித்வானும், சந்த்ரனது மைந்தனும் அழகிய குணமுடையவருமான புதனை நமஸ்கரிக்கிறேன்.

### பிருஹஸ்பதி.

**देवानां च ऋषीणां च गुरूं काञ्चनसन्निभम् ।**
**बुद्धिभूतं त्रिलोकस्य तं नमामि बृहस्पतिम् ॥**

தேவனும் ச ரிஷீணும் ச குரும் காஞ்சன ஸந்நிபம் ।
புத்தி பூதம் த்ரிலோகஸ்ய தம்நமாமி ப்ருஹஸ்பதிம் ॥

வானவர்களுக்கும் முனிவர்களுக்கும் குருவும், தங்க காந்தியுடைய வரும், மூவுலகிற்கும் புத்திமயமானவருமாகிய குருவைவணங்குகிறேன்

சுக்ரர்.

हिमकुन्द मृणालाभं दैत्यानां परमं गुरुम् ।
सर्वशास्त्र प्रवक्तारं भार्गवं प्रणमाम्यहम् ॥

ஹிமகுந்த ம்ருணாலாபம் தைத்யானும் பரமம் குரும் ।
ஸர்வ ஶாஸ்த்ர ப்ரவக்தாரம் பார்க்கவம் ப்ரணமாம்யஹம் ॥

பனி, மல்லி, தாமரைத் தண்டு இவை போன்ற வெண்மை நிற மானவரும், அஸுரர்களின் பரம குருவும், எல்லா சாஸ்த்ரங்களைக் கூறுபவருமான சுக்ரனை நமஸ்கரிக்கிறேன்.

சனைச்சரன்.

नीलाञ्जन समाभासं रविपुत्रं यमाग्रजम् ।
छायामार्ताण्ड संभूतं तं नमामि शनैश्चरम् ॥

நீலாஞ்ஜன ஸமாபாஸம் ரவிபுத்ரம் யமாக்ரஜம் ।
சாயாமார்தாண்ட ஸம்பூதம் தம்நமாமி ஶனைஶ்சரம் ॥

மைபோன்ற கருப்பு வர்ணமுள்ளவரும், சூர்ய புத்ரனும், யமனுக்குத் தமையனும், ரவிக்கு சாயாதேவியினிடத்தில் பிறந்தவருமாகிய சனைச்சரனை நமஸ்கரிக்கிறேன்.

ராகு.

अर्धकायं महावीर्यं चन्द्रादित्य विमर्दनम् ।
सिंहिकागर्भ संभूतं तं राहुं प्रणमाम्यहम् ॥

அர்தகாயம் மஹாவீர்யம் சந்த்ராதித்ய விமர்தனம் ।
ஸிம்ஹிகாகர்ப ஸம்பூதம் தம் ராஹும் ப்ரணமாம்யஹம் ॥

பாதி சரீர முடையவரும், அதிக பலவானும், சந்த்ர சூர்யர்களை மறைப்பவரும், ஸிம்ஹிகையின் குமாரனுமான ராகுவை வணங்குகிறேன்.

கேது.

पलाशपुष्पसंकाशं तारकाग्रहमस्तकम् ।
रौद्रं रौद्रात्मकं घोरं तं केतुं प्रणमाम्यहम् ॥

பலாஶபுஷ்ப ஸம்காஶம் தாரகாக்ரஹமஸ்தகம் ।
ரௌத்ரம் ரௌத்ராத்மகம் கோரம் தம்கேதும் ப்ரணமாம்யகம் ॥

புரசை புஷ்பம் போன்றவனும், நக்ஷத்ரமாயும், க்ரஹமாயும் உள்ள தலையுடையவனும், உக்ரமானவனும், கோபமுள்ளவனும், கோரரூபமுடையவனுமாகிய கேதுவை நமஸ்கரிக்கிறேன்.

---

# பாரத ஸாவித்ரீ.

[ஸ்ரீ வேதவ்யாஸர் ஸகல புராணங்களையும் பாரதத்தையும் எழுதி பாரதஸாரமாக பாரத மக்களுக்கு கூறிய அருமையான உபதேசமிது]

1 माता पितृ सहस्राणि पुत्रदार शतानिच।
संसारेष्वनुभूतानि यान्ति यास्यन्ति चापरे ॥

மாதாபித்ரு ஸஹஸ்ராணி புத்ரதார ஶதாநிச।
ஸம்ஸாரேஷ்வனு பூதாநி யாந்தி யாஸ்யந்தி சாபரே ॥

மாதா பித்ரு ஸஹஸ்ராணி – ஆயிரம்தாய்தந்தையர்கள், புத்ரதாரஶதானிச – நூற்றுக்கணக்கான மனைவி மக்களும், ஸம்ஸாரேஷு – ஸம்ஸாரங்களில், அனுபூதானி – அனுபவிக்கப்பட்டு, யாந்தி–சென்றன. அபரே – மற்றும்பல, யாஸ்யந்தி – செல்லப்போகின்றன.

[ஞானம் வந்தால் அல்லது ஸம்ஸாரத்திற்கு முடிவே இல்லை.]

2 हर्ष स्थान सहस्राणि भयस्थान शतानिच।
दिवसे दिवसे मूढं आविशन्ति न पण्डितम् ॥

ஹர்ஷ ஸ்தான ஸஹஸ்ராணி பயஸ்தான ஶதானிச।
திவஸே திவஸே மூடம் ஆவிஶந்தி நபண்டிதம் ॥

ஹர்ஷஸ்தான ஸஹஸ்ராணி – ஆயிரக் கணக்காக ஸந்தோஷபடும் ஸந்தர்ப்பங்களும், பயஸ்தானசதாநிச – நூற்றுக்கணக்காக பயப்படும் ஸந்தர்ப்பங்களும், திவஸே திவஸே – ஒவ்வொரு நாளிலும், மூடம் – மூடனை, ஆவிஶந்தி – வந்து அடைகின்றன. பண்டிதம் – பண்டிதனை, நாவிஶந்தி – அடைவதில்லை.

[பண்டிதனுயுள்ளவன் எது வந்தாலும் ஸந்தோஷப் படவும் மாட்டான். பயப்படவும் மாட்டான்.]

3 ऊर्ध्वबाहुर्विरौम्येषः नचकश्चित् श्रृणोतिमे।
धर्मादर्थश्च कामश्च सकिमर्थं नसेव्यते ॥

ஊர்த்வ பாஹுர்விரௌம்யேஷ: நசகஶ்சித்ஶ்ருணோதிமே
தர்மாதர்த்தஶ்ச காமஶ்ச ஸகிமர்தம் நஸேவ்யதே ॥

ஊர்த்வபாஹு: – மேலேகையைத் தூக்கிக்கொண்டு ஏஷ:–இந்த நான், விரௌமி–கத்துகிறேன். மே– எனது சொல்லை, கஶ்சித்–ஒருவனும், நஶ்ருணோதி – கேழ்ப்பது இல்லை. தர்மாத் –தர்மத்திலிருந்து, அர்த்தஶ்ச –பணமும், காம: ச – இஷ்டமும் உண்டாகிறது. ஸ: – அப்படிப்பட்ட தர்மமானது. கிமர்ததம் – ஏன், நஸேவ்யதே – ஸேவிக்கப் படுவதில்லை. [தர்மம் செய். அர்த்த காமமுண்டாகும்.]

---

**நந்தி தேவர் செய்காசியிலே ஸித்தி**

4 नजातु कामान्नभयान्न लोभात् धर्मं त्यजेत्जीवितस्यापि हेतोः
धर्मोनित्यः सुखदुःखेह्यनित्ये जीवो नित्यः हेतुरस्यत्वनित्यः ॥

நஜாதுகாமாங் நபயாங்நலோபாத் தர்மம்த்யஜேத் ஜீவிதஸ்யாபி ஹேதோ: । தர்மோநித்ய: ஸுகது: கேஹ்யநித்யே ஜீவோநித்ய: ஹேது ரஸ்யத்வநித்ய: ॥

ஜாது – ஒரு ஸமயமும், காமாத் – ஆசைக்காகவோ தர்மம் – தர்மத்தை, நத்யஜேத் – விடக்கூடாது, பயாத் – பயத்தினுலோ, ந – தர்மத்தை விடக்கூடாது. லோபாத் – லோபத்தினுலோ, ந – தர்மத்தை விடக்கூடாது. ஜீவிதஸ்யாபி ஹேதோ:-உயிரைரக்ஷிக்கும் காரணத்திற்காகக்கூட ந - தர்மத்தைவிடக்கூடாது. தர்ம: – தர்மமானது, நித்ய:- நித்யமானது, ஸுகதுக்கே – ஸுகதுக்கங்கள், அநித்யேஹி – அநித்யமானவை அல்லவா? ஜீவ: – ஜீவன், நித்ய: – என்று மழியாதவன், அஸ்ய – இவனுடைய, ஹேது: – காரணமானது, அநித்ய – நித்யமல்லாதது.

[ தர்மமே நித்யம். எக்காரணத்தினுலும் தர்மத்தை விடாதே.

---

# ★ தை மாஸ விசேஷம். ★

**உத்தராயணம்:—** ஸூர்யரதம் சிறிது வடக்கு முகமாகத் திரும்புவதால் இப்பெயர் தோன்றிற்று. தைமுதல் ஆனி கடைசி வரை உத்தராயணம். இது தேவர்களின் பகற்காலம். ஸகல சுபகார்யங்களுக்கும் ஏற்றகாலம். மேஷம் முதலிய 12 ராசிகளிலும் ஸூர்யன் பிரவேசிப்பதும் ஸங்க்ராந்திதான். 4 காலுள்ள எல்லாம் மிருகமே. ஆனுல் மானுக்கே மிருகமென சிறப்புப் பெயர். அப்படி மகர ஸங்க்ராந்திக்கே ஸங்க்ராந்தியென சிறப்புப் பெயர்.

**இம்மாத மஹிமை** ஸ்காந்தத்தில் 12 அத்யாயங்கள் உள. மரணத்திற்குக்கூட உத்தராயணம் சிறந்தது. தக்ஷிணயணத்தில் இறக்க வேண்டிய பீஷ்மர் உத்தராயணத்தை எதிர்பார்த்து பிறகு இறந்தார். பஞ்சாக்ஷரீ ஸூர்ய நமஸ்காரம் பஞ்சாயதந பூஜை, பிரதம ஸ்தாலீ பாகம் முதலியன இல்லாதவர் இப்போதே ஆரம்பிக்கலாம்.

**ரதஸப்தமீ :** 7 எருக்க இலை ஸ்நாநம் 7 ஜன்ம பாபத்தை அகற்றும். சூர்ய பூஜை, சக்கரைப்பொங்கல் தானம் விசேஷம்.

ஸ்நாநம் செய்ய மந்த்ரம்.

ஸப்த ஸப்தி ப்ரியே தேவி ஸப்த லோகைக பூஜிதே
ஸப்த ஜன்ம க்ருதம் பாபம் ஹரஸப்தமி ஸத்வரம்,
யத்யத் ஜன்மக்ருதம் பாபம் மயா ஸப்தஸு ஜன்மஸு
தன்மே சோகஞ்ச மோகஞ்ச மாகரீஹந்து ஸப்தமீ.

---

பாம்பாட்டி ஸித்தர் விருத்தாசலத்திலே (ஆடு பாம்பே)

# பஞ்சாக்ஷர சாஸ்தா ஸ்துதி,

[தைமாதத்தில் நித்ய பாராயணம் செய்தால் துக்கம் அகன்று சுகமுண்டாகும்].

1. ओङ्कारमूर्ति मार्त्तिघ्नं देवं हरि हरात्मजम् ।
शबरीपीठनिलयं शास्तारं प्रणतोस्म्यहम्

ஓம்காரமூர்த்தி மார்த்திக்நம் தேவம் ஹரி ஹராத்மஜம் ।
ஶபரீபீடநிலயம் ஶாஸ்தாரம் ப்ரணதோஸ்ம்யஹம் ॥

ஓங்காரவடிவனும், துக்கத்தைப் போக்கடிப்பவனும், மிக ப்ரகாசமுள்ளவனும், ஹரிஹரபுத்ரனும், ஶபரீபீடத்திலிருப்பவனுமான ஶாஸ்தாவை நமஸ்கரிக்கிறேன்.

2. नक्षत्रनाथवदनं नाथं त्रिभुवनावनम् ।
नमिताऽशेषभुवनं शास्तारं नौमि पावनम् ॥

நக்ஷத்ரநாதவதனம் நாதம் த்ரிபுவனாவனம் ।
நமிதாஶேஷபுவனம் ஶாஸ்தாரம் நௌமிபாவனம் ॥

சந்திரன் போன்ற முகமுடையவரும், ஸர்வலோக நாதனும், மூவுலகையும் காப்பவரும், ஸகல உலகத்தாராலும் வணங்கப்பட்டவரும், பவித்ரருமான ஶாஸ்தாவை வணங்குகிறேன்.

3. मन्मथायुतसौन्दर्यं महाभूतनिषेवितम् ।
मृगयारसिकं शूरं शास्तारं प्रणतोऽस्म्यहम् ॥

மன்மதாயுத ஸௌந்தர்யம் மஹாபூதநிஷேவிதம் ।
ம்ருகயாரஸிகம் ஶூரம் ஶாஸ்தாரம் ப்ரணதோஸ்ம்யஹம் ॥

கோடிமன்மதனைப்போன்ற அழகுள்ளவரும், மஹாபூதங்களால் ஸேவிக்கப்பட்டவரும், வேட்டையாடுவதில் ஆசையுள்ளவரும், சூரனுமான ஶாஸ்தாவை நமஸ்கரிக்கிறேன்.

4. शिवप्रदायिनं भक्त दैवतं पाण्ड्यबालकम् ।
शार्दूलदुग्धहर्तारं शास्तारं प्रणतोऽस्म्यहम् ॥

ஶிவப்ரதாயினம் பக்த தைவதம் பாண்ட்ய பாலகம் ।
ஶார்தூல துக்தஹர்தாரம் ஶாஸ்தாரம் ப்ரணதோஸ்ம்யஹம் ॥

மங்களத்தை யளிப்பவரும், பக்தர்களுக்கு ப்ரத்யக்ஷ தெய்வமும், பாண்ட்ய குமாரனும், புலிப்பால் கொண்டு வந்தவருமான ஶாஸ்தாவை நமஸ்கரிக்கிறேன்.

5. वारणेन्द्र समारूढं विश्वत्राण परायणम् ।
वेदोद्भासि कराम्भोजं शास्तारं प्रणतोस्म्यहम् ॥

---

குதும்பைஸித்தர் மாயவரத்தில். (குதும்பாய் பாடியவர்)

வாரணேந்த்ர ஸமாரூடம் விஸ்வத்ராண பராயணம் |
வேதோத்பாஸி கராம்போஜம் ஶாஸ்தாரம் ப்ரணதோஸ்ம்யஹம்.

யானைமீது ஏறியவரும், உலகையெல்லாம் காப்பதில் ஊக்கமுள்ளவரும், வேதத்தை விளக்கும் கராரவிந்த முள்ளவருமான ஶாஸ்தாவை நமஸ்கரிக்கிறேன்.

6. यक्षिण्यभिमतं पूर्ण पुष्कला परिशोवितम् ।
क्षिप्र प्रसादकं नित्यं शास्तारं प्रणतोऽस्म्यहम् ॥

யக்ஷிண்யபிமதம் பூர்ண புஷ்கலா பரிஸேவிதம் |
க்ஷிப்ரப்ரஸாதகம் நித்யம் ஶாஸ்தாரம் ப்ரணதோஸ்ம்யஹம் ||

யக்ஷிணிகளுக்கு இஷ்டமானவரும், பூர்ண புஷ்களாம்பிகைகளோடு கூடியவரும் விரைவில் ப்ரஸாதம் செய்பவருமான ஶாஸ்தாவை நமஸ்கரிக்கிறேன்.

---

## தார்மிகச் செய்திகள்.

**கோயம்பத்தூரில் ஸ்ரீ சங்கர மடம்:** ஸ்ரீ ச்ருங்கேரி ஜகத்குருவின் அநுக்ரஹம் பெற்று, லக்ஷத்து இருபத்தையாயிரம் ரூபாய் செலவில் மிக விஸ்தாரமாக ஒரு மடம் அமைக்கப்பட்டிருப்பதைக் கேட்க மிக்க ஸந்தோஷம். முற்றிலும் தர்ம கார்யத்திற்கே பயன்படுமென நம்புகிறோம்.

**வைதிக வர்த்தனீ வேதசாஸ்த்ர பாடசாலை:** பரமாசார்யாள் ஆக்ஞைபடி மாம்பலம் வைதிக மஹாஜனங்களால் ஆரம்பிக்கப்பட்டு மூன்று மாணவர் குருகுலவாஸ நியமத்துடன் பூர்ணமாக அத்யயனம் செய்கின்றனர். நன்கொடையாகவோ, மாதச் சந்தாவாகவோ தந உதவிசெய்து ஆசார்ய கருணைக்கும், வேத புருஷ அநுக்ரஹத்திற்கும் பாத்ரமாக வேண்டுகிறோம். ஸ்ரீ K. ராமசந்த்ரய்யர், வேத சாஸ்த்ர பாடசாலை, எல்லையம்மன் கோவில் தெரு, மேலமாம்பலம், சென்னை 17 என்ற விலாஸத்திற்கு அனுப்பவும்.

**மாம்பலம் குருகுலம்:** ஸ்ரீ ஜகத்குரு ஆக்ஞையின்படி தனுர் மாஸம் பூராவும் ஸ்ரீமதி குமாரி மஹாலக்ஷ்மியின் கோஷ்டி திருப்பாவை திருவெம்பாவை பாடிற்று.

**வேத தர்ம சாஸ்த்ர ஸம்மேளனம்:** சென்னை முத்தியால் பேட்டை, திருவல்லிக்கேணி, பழைய மாம்பலம் ஆகிய இடங்களிலும் மற்றும் பல இடங்களிலும் ஸ்ரீ வ்யாஸ பூஜை, ஆவஹந்தீ ஹோமம், உபன்யாஸங்கள், வார்ஷிக ஸம்பாவனை, கல்வைத்த வாரம் முதலியவைகள் வழக்கப்படி செவ்வனே நடந்தன.

**சமயப்ரசாரம்:** ராமேச்வரம் தேவஸ்தானம் முன்னாள் சமய ப்ரசாரகர் கீரனூர் குகஸ்ரீ குகாநந்தவாரியார் அவர்கள் யாழ்பாணத்திலே உள்ள பல ஆலயங்களில் நான்கு மாத காலம் சொற்பொழிவுகள் ஆற்றிவிட்டு, சமயப்ரசாரத்திற்காக 1960 ஜனவரியில் மலாயா பிரயாணமாகிறார்கள்.

---

**கருவூர் ஸித்தர் கருவூரில் ஸித்தி**

# ஸந்தேஹ விளக்கம்.

தேசிகாசாரி ஸ்வாமிகள், உப்பிலியப்பன் கோவில்.

20. கயையில் ஒரு முறை ச்ராத்தம் செய்து பிண்டமளித்துவிட்டால் மறுபடி ச்ராத்தம் செய்யவேண்டுமா?

பலர் பலமுறை இதே கேள்வியை நேரில் கேட்டனர். கயா மாஹாத்ம்ய வசநங்கள் கூட பித்ருக்கள் அக்ஷய்யமான த்ருப்தி அடைகிறார்கள் என்று கூறுகிறதே தவிர மறுபடி ம்ராத்தம் பண்ணக்கூடாதென நிஷேதிக்கவில்லை. ஆதலால் அவம்யம் செய்யத்தான் வேண்டும். ம்ராத்தம் பித்ருக்களது த்ருப்திக்கு மாத்ரமல்ல. நமக்குமது க்ஷேமத்தைத் தருகிறது.

தியாகராஜய்யர், ஆதிக்சபுரம்.

21. ஸபிண்டீகரணத்திலும், மாஸ்யங்களிலும் விஷ்ணு வரணமில்லை, இலையும் போடவில்லை. ஆனால் பிறகு முன்னோர் விஷ்ணு இலை போட்டதாகத் தெரிந்தது. ஆப்திகத்திலும், ப்ரத்யாப்திகத்திலும் விஷ்ணு வரணம்செய்யலாமா கூடாதா? ஸ்ரீ ஜகத்குரு உத்திரவும் வேண்டும்.

ம்ராத்தத்தில் விஷ்ணு பூஜை செய்யும் ஸம்ப்ரதாயம் உள்ளவர் சென்றது போக இனிமேல் நடக்கும் ஆப்திக பிரத்யாப்திகங்களில் கட்டாயம் விஷ்ணுவரணம் செய்ய வேண்டியதுதான். ஸ்ரீ ஜகத்குரு உத்திரவு.

விஷ்ணுவரணமில்லாத ம்ராத்தம் வீண் என சாஸ்த்ரம் கூறுகிறது. ஆனால் எக்காரணம் பற்றியோ சிலர் ம்ராத்தத்தில் விஷ்ணு ஆராதனம் செய்வதில்லை. சிலர் ப்ரத்யக்ஷ விஷ்ணு என ஒரு இலையில் பரிமாறி ஸாளக்ராமத்தை அதனருகில் வைத்து பிறகு ப்ரும்மசாரியை சாப்பிடச் சொல்வர். ம்ராத்த ஸம்ரக்ஷக விஷ்ணு என மற்றவர்களைப்போல் மூன்றாவதாக ஒருவரை அர்ச்சிப்பது உண்டு. இரண்டு வகையான விஷ்ணுவையுமாராதிப்பது உண்டு சிலர். அவரவர் முன்னோர் ஸம்ப்ரதாயத்தை மாற்றலாகாது.

V. ஸ்ரீநிவாஸய்யர், அட்வகேட், திருச்சி.

22. மூலஸ்தான மூர்த்தி இல்லாத ஆலயத்தில் உத்ஸவ மூர்த்திக்கு லக்ஷார்ச்சனை செய்யலாமா?

உத்ஸவ விக்ரஹத்திற்கு ஆகம விதிப்படி கும்பாபிஷேகமாகியிருந்தால் செய்யலாம். மூலஸ்தானத்தையும் ப்ரதிஷ்டை செய்வது உசிதம்.

---

**கோரக்க ஸித்தர் பேய் குமரியில் ஸித்தி**

கு. கணேச சர்மா, சிலோன்.

23. ஒரு ஜீவன் இறந்தால் அது ஒரு ஆண்டிற்குள் மறு பிறவி எடுப்பதாகக் கூறுகிருர்கள். அது மறு பிறவி எடுத்தபின் அதற்கு சிராத்தம் செய்யவேண்டுமா ?

இறந்த ஜீவன் யமலோகம் போவதற்கே ஓர் ஆண்டு ஆகிறது. ஒரு ப்ராரப்த கர்மாவால் இறந்து இறந்து பிறக்க நேரிட்டால் ஒரு ஸமயம் அப்படி ஓராண்டுக்குள் மறு பிறவி எடுத்தாலும் 2, 3 ஆண்டுகளுக்குள் அது மறு பிறவி எடுத்தாலும் கட்டாயம் சிராத்தம் செய்யத்தான் வேண்டும். அந்த பிறவிக்கேற்ற உணவாக அது அளிக்கப்படும். (ஆபஸ்தம்ப தர்ப்பண் விளக்கம் 70 காசு அனுப்பி அதில் விவரம் காணலாம்.)

ப்ரணதார்த்திஹரன், பாம்பே.

24. தாயார், தகப்பஞர் இருக்கும்பொழுது, புத்ரன் ப்ரும்மயக்ஞ பித்ருதர்ப்பணத்தை ப்ராசீனுவீதமாகச் செய்யலாமா ?

நன்ருகச் செய்யலாம். செய்யவேண்டும் என சாஸ்த்ரம் கூறுகிறது. தவறுதலாக அது அச்சான்யம் என பெரும்பாலோர் செய்வதில்லை.

---

# தைமீ கோசாரப்பலன் | ஜோதிஷப் பகுதி

ஜோதிஷபானு E. S. K. ஸ்வாமி, பாரத் கிரஹ ஸஞ்சார ஆசிரியர்,
4, கிருஷ்ணமாசாரி தெரு, தி. நகர், சென்னை-17.

## மேஷ ராசி

அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய

இம் மாதம் 9உ வரை குரு அஷ்டமத்திலும் பின் பாக்கியத்திலும் இருக்கிருர். சனி பாக்கியத்திலும், ராகு ஆறிலும், கேது விரயத்திலுமிருக்கிருர்கள். சூரியன் ஜீவனத்திலிருக்கிருர். இதனுல் புதிய ஏற்பாடுகள் உண்டாகும். ராஜாங்க மூலம் கவலை, பிறர் சகாயம் ஏற்படுதல், சுப காரியங்களில் முயற்சிப் பலிதமாதல், வெளியூர் போய்வருதல், பொருள் சேர்க்கை இப்படி ஏற்படும். சஷ்டி கவசம் பாராயணம் செய்ய நன்மை.

## ரிஷப ராசி

க்ருத். 2ம் பாதம் முதல் ரோகிணி மிருகசீரிஷம் 2ம் பாதம் முடிய

குரு 9உ வரை ஸப்தமத்திலும், பின் அஷ்டமத்திலும், சனி அஷ்டமத்திலும், ராகு பஞ்சமத்திலும், கேது லாபத்திலுமிருக்கிருர்கள். சூரியன் பாக்யத்திலிருக்கிருர். இதனுல் சினேகப் பிரிவு ஏற்படும். கொடுப்பல்வகை நிர்ப்பந்தம் உண்டாகும். வீண்வகையில் விரோதம், சிலருக்கு உத்தியோகத்தில் மாற்றம் உண்டாகும். பிறர் காரியங்களில் தலையிடும்படியாகும். அந்தரங்கமான சில கவலைகள் ஏற்பட்டு வரும். நம்பி ஏமாறுவதும் உண்டாகும். அம்பாள் பூஜை செய்துவர அரிஷ்டம் விலகும்.

---

கட்டமுறி ஜோதிரங்கத்தில் ஸித்தி.

## மிதுன ராசி

### மிருக. 3ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்வசு 3ம் பாதம் முடிய

குரு 9உ வரை ஆறிலும், பின் ஸப்தமத்திற்கும் வருகிறார். சனி ஏழிலும், ராகு நான்கிலும், கேது ஜீவனத்திலும் இருக்கிறார்கள். சூரியன் அஷ்டமத்தில் இருக்கிறார். இதனால் பந்து விரோதம் ஏற்படும். புண்ணிய வகையில் சிலவுகள், சரீர சோர்வு, செய்தொழிலில் புதிய முன்னேற்றம், வருமானம் கூடுதல், பிறர் சகாயம் இப்படி ஏற்படும். மஹாவிஷ்ணுவுக்கு அபிஷேக ஆதாரனை செய்ய அசக்தம் விலகும்.

## கடக ராசி

### புனர்வசு 4ம் பாதம் முதல் புஷ்யம், ஆயில்யம் முடிய

குரு 9உ வரை பஞ்சமத்திலிருந்து பின் ஆறுமிடம் வருகிறார். சனி ஆறிலும், ராகு மூன்றிலும். கேது பாக்கியத்திலும் இருக்கிறார்கள். சூரியன் ஸப்தமத்திலிருக்கிறார். இதனால் சில்லரைக் கடனால் நச்சரிப்பு ஏற்படும். குடும்ப நடப்பில் கவலை, வீண்வகையில் சிலவுகள் உண்டாகும். நம்பி ஏமாற்றம் உண்டாகும். புதிய முயற்சிகளில் தடை, அதிகாரியால் வருத்தம், சிலரிடம் மனஸ்தாபப்பட நேருதல் இப்படி உண்டாகும். லலிதா ஸஹஸ்திர நாம பாராயணஞ் செய்ய நன்மை.

## சிம்ம ராசி

### மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய

குரு 9உ வரை சுகத்திலும் பின் பஞ்சமத்திலுமிருக்கிறார். சனி பஞ்சமத்திலும், ராகு தனத்திலும், கேது அஷ்டமத்திலும் இருக்கிறார்கள். சூரியன் ஆறிலிருக்கிறார். இதனால் பிறர் சகாயத்தை நாடும்படியாகும். குடும்பத்தில் வைத்ய செலவு, காரியம் தடைப்பட்டுக் கூடுதல், சிநேகிதர், பந்துக்கள் இவர்களால் கவலை உண்டாதல், சுபச்சேதி கேட்டல், பிரயாணம் உண்டாதல் இப்படி ஏற்படும். ஆதித்ய ஹிருதயம் பாராயணம் செய்துவர நன்மை.

## கன்னியா ராசி

### உத்திரம் 2ம் பாதம் முதல் ஹஸ்தம் சித்திரை 2ம் பாதம் முடிய

குரு 9உ வரை மூன்றிலிருந்து பின் சுகத்திற்கு வருகிறார். சனி சுகத்திலும், ராகு ராசியிலும், கேது ஏழிலுமிருக்கிறார்கள். சூரியன் பஞ்சமத்திலிருக்கிறார். இதனால் வரவேண்டியவைத் தடையாகும். கலகச் சேதி கேள்விப்பட நேரும். பந்துவால் கிலேசம் உண்டாகும். பெரிய மனுஷ்யர்கள் நேசம் ஏற்படும். செய்தொழிலில் சிரமம் அதிகமாகும். குடும்பசுகம் ஏற்பட்டு வருவதாகும். ருத்ர ஜபம் செய்துவர பீடை விலகும்.

## துலா ராசி

### சித். 3ம் பாதம் முதல் சுவாதி விசாகம் 3ம் பாதம் முடிய

குரு 9உ வரை மூன்றிலிருந்து பின் சுகத்திற்கு வருகிறார். சனி மூன்றிலும், ராகு விரயத்திலும், கேது ஆறிலும் இருக்கிறார்கள். சூரியன் சுகத்திலிருக்கிறார். இதனால் அதிகாரியால் வருத்தம், உத்தியோகத்தில் கவலை, செலவு அதிகமாதல், சிலரிடம் பகை ஏற்படல், நிர்ப்பந்தமான காரியங்கள் உண்டாதல், வெளியூர் பிரயாணம் ஏற்படல், புதிய முயற்சிகளில் தடை இப்படி ஏற்படும். தக்ஷிணாமூர்த்தி அஷ்டோத்திர பாராயணம் செய்ய நலம்.

---

**சுந்தரானந்த தேவர் மதுரையிலே ஸித்தி**

## விருச்சிகராசி

### விசாகம் 4ம் பாதம் முதல் அனுஷம் கேட்டை முடிய

குரு 9உ வரை ராசியிலிருந்து பின் தனத்திற்கு வருகிறார். சனி தனத்திலும், ராகு லாபத்திலும், கேது பஞ்சமத்திலும் இருக்கிறார்கள். சூரியன் மூன்றிலிருக்கிறார். இதனால் அலைச்சல் காரியங்கள் ஏற்படும். புதிய முயற்சிகள் உண்டாகும். அன்னியர் ஆதரவு ஏற்படும். விவாத விஷயங்களில் கலந்துகொள்ளும்படியாகும். இரகசிய சத்துரு மூலம் சிலகவலையும், மறைமுகமான தூஷணையும் ஏற்படும். சனீஸ்வரனுக்கு அபிஷேகமும், பிரதக்ஷணமும் செய்துவர நன்மை.

## தனுர் ராசி

### மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய

குரு 9உ வரை விரயத்திலும் பின் ராசிக்கும் வருகிறார். சனி ராசியிலிருக்கிறார். ராகு பத்திலும், கேது சுகத்திலும் இருக்கிறார்கள். சூரியன் தனத்திலிருக்கிறார். இதனால் பிறர் சகாயம் ஏற்படும். ஆரோக்யவகையில் செலவுகள், பந்துவால் கிலேசம், குடும்பத்தில் நச்சரிப்பு, சில பொருள் விற்க நேருதல், புதிய சிந்தனைகள் உண்டாதல், ராஜாங்க மூலமான கவலை ஏற்படல், தன் சொல்லே தனக்குப் பகையாதல், சகவாசத்தால் வருத்தம் இப்படி ஏற்படும். விநாயகருக்கு அபிஷேக ஆராதனை செய்ய நன்மை.

## மகர ராசி

### உத்திரா. 2ம்பாதம் முதல் திருவோணம், அவிட். 2ம்பாதம் முடிய

குரு 9உ வரை லாபத்திலும், பின் விரயத்திற்கும் வருகிறார். சனி விரயத்திலிருக்கிறார் ராகு பாக்கியத்திலும், கேது மூன்றிலு மிருக்கிறார்கள். சூரியன் ராசியிலிருக்கிறார். இதனால் அலைச்சல் மிகுதியாகும். சிலருக்குப் பகையும், பணமுடையும் உண்டாகும். கொடுப்பல் நிற்பந்தம் ஏற்படும். புதிய முயற்சிகள் தடையாகும். சிலருக்கு உத்தியோக மாற்றம் ஏற்படும். குடும்பச் செலவுகள் அதிகமாகும். அந்தரங்கமான கவலைகள் ஏற்பட்டு வருவதாகும். நவக்கிரக ஹோமம், பிரதக்ஷணம் செய்யப் பீடை விலகும்.

## கும்ப ராசி

### அவிட்டம் 3ம் பாதம் முதல் சதயம், பூரட். 3ம் பாதம் முடிய

குரு 9உ வரை பத்திலும், பின் லாபத்திலும், சனி லாபத்திலும், ராகு அஷ்டமத்திலும், கேது இரண்டிலும் சூரியன் விரயத்திலும் இருக்கிறார்கள். இதனால் வெளியூர் அலைச்சல், புண்ணிய காரியங்களில் செலவு, ஆரோக்கிய ஸம்பந்தமாய் குடும்பத்தில் கவலை, தன நடப்பில் சுகம், பழைய வரவுகளில் திருப்தி, பந்துவால் சில கிலேசம், சுப முயற்சிகள் இப்படி உண்டாகும். காளி, துர்க்கை இவைகளுக்கு அபிஷேகம் முக்கியம்.

## மீன ராசி

### பூரட்டாதி 4ம் பாதம் முதல் உத்திரட்டாதி, ரேவதி முடிய

குரு 9உ வரை பாக்கியத்திலிருந்து பின் ஜீவனத்திற்கு வருகிறார். சனி பத்திலிருக்கிறார். ராகு ஏழிலும், கேது ராசியிலும் இருக்கிறார்கள். சூரியன் லாபத்திலிருக்கிறார். இதனால் பழைய விவாதங்கள் நீங்கும். தொழில் முன்னேற்றமும், வருமானமும் ஏற்படும். அலைச்சல் அதிகமாகும். புதிய ஏற்பாடுகள் உண்டாகும். குடும்ப நடப்பில் நன்மை ஏற்படும். புதிய சினேக விருத்தி உண்டாகும். பந்து சேர்க்கையும், சில பொருள் வாங்குதலும் ஏற்படும். சில பொருள் விற்பனையில் அனுகூலம் உண்டாகும். பிரதி வியாழக்கிழமையும் அன்னதானம் செய்ய நன்மை விருத்தியாகும்.

---

**இதில் சிலரது பாடல்களே கிடைக்கின்றன.**

## ஆயுர் வேதம் (15)

வைத்தியப் பகுதி.

Dr. V. K. வெங்கிடசாமி, M. B., B. S., F. I. M.,
1/3, A. D'Sylva Road, Mylapore, Madras-4.

*(1)* **அபயாரிஷ்டம்:**— ($\frac{1}{2}$—$\frac{3}{4}$ அவுன்ஸ் தினம் இருமுறை) தயாரிப்பவர்களிடம் வாங்கிக்கொள்வது சுலபம். (2) **திருவிருத் லேஹ்யம்:**-சிவதை சூர்ணம், கடுக்காய், திராக்ஷை ஒவ்வொன்றும் 4 பலம், சுக்கு $1\frac{1}{2}$ பலம், சரக்கொன்றை புளி 2 தோலா, ஏலக்காய் $\frac{1}{4}$ தோலா இவைகளைச் சூரணித்து, 1 வீசை கற்கண்டைப் பாகுசெய்து இப்பாகில் சூரணத்தைச் சேர்த்து, நெய் 10 பலம்விட்டு. லேஹ்ய பாகத்தில் காய்ச்சவும். அடுப்பை விட்டு எடுக்கும்போது பச்சைக்கர்ப்பூரம் 25 கிரெய்ன்ஸ் பொடித்துச் சேர்த்து ஆறினபின் 20 பலம் தேன் கூட்டவும். ($\frac{1}{2}$—1 தோலா இரவில் படுக்கும்போதோ அல்லது விடியற்காலையிலோ சாப்பிடலாம்). (3) சுக்கும் வெல்லமும் சேர்த்து கச்சக்காய் அளவு தினம் இருமுறை உண்ணலாம். (4) பசு மூத்திரத்தில் ஊறவைத்து எடுத்த கடுக்காய் ஒன்று இரண்டு (கொட்டை நீக்கி) வெல்லத்துடன் உட்கொள்ளலாம். (5) திரிபலா சூர்ணத்தை சமயிடை குல்கந்துடன் கூட்டி ஒரு தோலா இரவில் சாப்பிடலாம்.

உணவில் எந்த ரஸத்தையும், அதிலும் காரவகைகளை அளவறிந்து உபயோகிக்கவும். மிதமான ஆகாரம் நல்லது. நைப்புத் தன்மைகொண்ட வெண்ணெய், நெய் போன்ற வஸ்துக்களை தாராளமாக — ஆனால் அதிகமின்றி — உட்கொள்வது நல்லது. வாரம் இருமுறை வெல்லத்துடன் தயாரித்த எள்ளுப் பொடியைச் சேர்த்துக் கொள்ளவும். பிடிக் கரணைக்கிழங்கை அடிக்கடி உணவுடன் உபயோகிக்கவும். மோர், அர்சஸ் ரோகிக்கு நன்மை தரும். சிறுகளாக்காய்களை மோரில் ஊறவைத்துச் சாப்பிடலாம். நெற்பொரிமாவும் மோரும்சேர்ந்த பானம் மிகவுமேற்றது.

மூலரோகத்தில் வலி அதிகமானால், சூடான ஒத்தடம் கொடுக்கவும். (1) உபயோகமான முறை பின்வருமாறு: ஒரு துணியை சிறிய முடிச்சாகக் கையில் பிடித்துக்கொள்ளும்படி கட்டிக்கொள்ளவும். ஒரு கரண்டியில் விளக்கெண்ணெயைச் சுடவைத்துக்கொண்டு, இம் முடிச்சை அதில் தோய்த்துத் தேவையான அளவு சூட்டுடன் ஆஸனவாயண்டை ஒத்தவும். ஒரு சமயம் 5–10 நிமிஷம் ஒத்

---

தடம் கொடுக்கலாம். இப்படி தினம் மூன்றுமுறை செய்யவும். (2) துத்தி இலையை காம்பு நரம்பு நீக்கி விளக்கெண்ணை விட்டு வதக்கிப் பொறுக்கும்படியான சூட்டில் கட்டலாம். (3) மஞ்சள் கரிசலாங்கணியை சிறிதாக நறுக்கி கொஞ்சம் இடித்து தண்ணீரில்போட்டுக் கொதிக்க வைத்து கீழே இறக்கிவிடவும். அதிலிருந்து கிளம்பும் ஆவியை மூலமுளைகளின் பேரில் ஜாக்கிரதையாய்ப் படும்படிச்செய்யவும். வாரம் இருமுறையாவது க்ஷீரபலா தைலம் அல்லது பிருங்காமலக தைலம் தலைக்குத் தேய்த்துக் கொண்டு உடம்பிற்கு நல்லெண்ணைத் தடவி வெந்நீரில் ஸ்நானம்செய்யவும். மூலரோகிகளுக்கு இது குளிர்ச்சியை உண்டு பண்ணி மூலத்தைச் சமனப்படுத்தும்.

மூலம் இரத்தம் அதிகம்போகும்போது, மலச்சிக்கல் இல்லாதவாறு முதலில் செய்துகொள்ளவேண்டும். தயிர், மோர் சேர்ந்த ஆகாரம் நல்லது. வெண்ணெய், நெய், பால் சேர்த்துக் கொள்ளவும். அரைப்பலம் எள்ளுடன் ஒரு பலம் வெண்ணை சேர்த்துச் சாப்பிடவும். அல்லது அரைப்பலம் சர்க்கரை, அரைப்பலம் தாமரை தாது, ஒரு பலம் வெண்ணை சேர்த்து உட்கொள்ளவும். மருந்தாக (1) குடஜாரிஷ்டம் ($\frac{1}{2}$–$\frac{3}{4}$ அவுன்ஸ் தினம் இருமுறை). (2) குடஜாவலேஹ்யம் ($\frac{1}{2}$ தோலா தினம் இருமுறை). அரிஷ்டத்தை வாங்கிக்கொள்வது சுலபம். லேஹ்யத்தைச் செய்துகொள்ளலாம். [வெட்பாலைப் பட்டை 50 பலம் இடித்து 16 படி ஜலத்திலிட்டு எட்டிலொன்ருய்க் காய்ச்சி வடிக்கட்டவும். 15 பலம் வெல்லம் சேர்த்து பாகுசெய்து அத்துடன் சுக்கு, மிளகு, திப்பிலி, சுவர்ணமாக்ஷிகம், சிற்ருமுட்டி, வில்வப்பிஞ்சு, மஞ்சிஷ்டி, இலவம் பிசின், மாதுளன் தோல், கோரைக்கிழங்கு, காட்டாத்திப்பூ, லோத்திரப்பட்டை வகைக்கு அரைப்பலம், வெட்பாலைப் பட்டை 5 பலம் நன்ருகப் பொடியாக்கி வஸ்திரகாயம் செய்துச் சேர்த்துக் கிண்டி நெய் 10 பலம் விட்டுக் கிளறி லேஹ்ய பதத்தில் எடுக்கவும்]. குடஜா அரிஷ்டமோ, லேஹ்யமோ சாப்பிடும்போது தினம் இருமுறை கீழ்க்கண்ட சூர்ணத்தை நெய்யும் தேனும் கலந்து சாப்பிடவும். சால்மலி (வேலம் பிசின்) சூர்ணம் 20 கிரெய்ன்ஸ், (கொம்பரக்கு) லாக்ஷா சூரணம் 20 கிரெய்ன்ஸ், காவிக்கல் பொடி 10 கிரெயின்ஸ், வெட்பாலை அரிசி சூர்ணம் 20 கிரெயின்ஸ் கலந்து, 30 கிரெயின்ஸ் தினம் இருமுறை.

---

**இவர்களது சரிதம் கிடைத்தால் எழுதுவோம்.**

# கல்கி புராணம்.

அநந்தர் கூறினர்: மாயையை ஜயிக்க காட்டிற்குச் சென்று விதிப்படி தவம்செய்தேன். ஆயினும் இந்த்ரியங்களும் மனதுமடங்கவில்லை. ஏகாந்தமாக உட்கார்ந்திருந்து பகவானை த்யானம் செய்யும் பொழுதும் இடையிடையே மக்கள் மனைவிகளின் நினைவும் மற்ற போக விஷயங்களின் எண்ணமும் நினைவுக்கு வந்தன. அந்த நினைவினுல் துக்கம் ஸோக மோஹம்முதலியன தோன்றி த்யானத்தை நாசம் செய்தன. முதலில் பஞ்சேந்த்ரியங்களை யடக்குவதென்று நிச்சயித்து முயற்சித்தேன். உடனே பத்து இந்த்ரியங்களுக்கும் அதிஷ்டான தேவதைகள் உருவு எடுத்து என்னிடம் வந்தன. ஓ அனந்த! திக்தேவர், வாயுதேவர், ஸூர்யன், வருணன், அச்விநிகள், அக்னி, இந்திரன், உபேந்திரன், மித்ரன் முதலிய நாங்கள் இந்த்ரியங்களுக்கு அதிஷ்டான தேவதைகளாவோம்.

உன்னுடைய தேஹத்தில் தங்கியிருக்கின்றோம். நகத்தின் நுனிமுதல் தலைவரையில் உள்ள எங்களை வீணிலே ஹிம்ஸை செய்யாதே. மனதைப் பலவந்தமாக அடக்குவதில் உனக்கு யாதொரு நன்மையுமுண்டாகாது. எங்களைச் சேதிப்பதினுலும், பேதிப்பதனுலும், உன்னுடைய மர்ம ஸ்தானங்களறுபட்டு, நீயே இறப்பாய். குருடர், செவிடர், முடவர் முதலிய இந்த்ரியப் பழுதுள்ளவர் கூட காட்டிலும் கூட மனதில் பலவித விஷயங்களை எண்ணிக் கொண்டு வருந்துவதைக் காண்கிறோம். வீட்டில் வஸிக்கின்ற க்ருஹஸ்தனுக்கு உடலே வீடு. மனஸ் வேலைக்காரன். புத்தி மனைவி. அவர்களது வேலைக்காரர்கள் நாங்கள். கர்மாவில் ஈடுபடும் ஜீவனுக்கு மனமானது பந்தத்திலிருந்து விடுபடுகின்றது. பகவானுடைய மாயையினுல் மயங்கியவனுக்கு ஜனன மரணுதி ஸம்ஸாரம் ஏற்படுகின்றது. ஆதலால் மனதை யடக்க விஷ்ணு பக்தியைச் செய். அது சுலபமாக மோக்ஷம் தரும். கர்ம பந்தங்களை எறிக்கும். த்வைத அத்வைதங்களால் உண்டாகும் ஆனந்த மனைத்தையும் தரும். பக்தியினுல் ஜீவனுக்கு உண்டான துக்கங்கள் போய் சுத்த ஆத்ம ஸ்வரூபத்தை அடைவாய். பகவான் கல்கியைத் தர்சித்தவுடன் ஜீவன் முக்தனுவாய் என்று எனக்கு போதித்தார்கள். எனவே யான் விஷ்ணு பக்தி செய்து கல்கி பகவானைத் தர்சிப்பதற்காக வந்தேன். அவர் கலியின் குலத்தை அழிப்பவர். ரூப மில்லாத பகவான். கல்கி

ரூபத்தைத் தர்சித்து பாதகமில்லா அவரது பாதார விந்தத்தைத் தொட்டேன். வாக்குக் கெட்டாத பரமாத்மாவைப் பற்றி பல சொற்களைக் கேட்டேன், கூறினேன். என்று கூறி பேரானந்தம் அடைந்த அனந்த முனிவர் தாமரைக் கண்ணனும் பத்மநாபனும் ஸர்வேஸ்வரனுமான கல்கியை வலம்வந்து வணங்கி விடைபெற்றுச்சென்றார்.

அரசர்களும் முனிவரது வசனத்தைக்கேட்டு சிறந்த பக்தியுள்ளவர்களாகி பத்மாவையும் கல்கியையும் விதிப்படி அர்ச்சித்து மஹரிஷிகளைப்போல் வ்ரதம் கொண்டார்கள். அநந்தனது சரிதம் அக்ஞானமெனும் இருளை நீக்கும். படிப்பவரது மாயையையும் பந்தத்தையும் அகற்றும். ஸம்ஸாரமெனும் கடலில் ஈடுபட்டுள்ள புத்தியுள்ள மனிதன் விஷ்ணு ஸேவையில் ஈடுபட்டு பக்தியோடு கூட இந்தக் கதையைத் தன்னை யொட்டியதாகவெண்ணி ஞானமெனும் கூறிய கத்தியேந்தி ஸந்தோஷமடைந்து ஸத்பக்தி எனும் கோட்டையை ஆஸ்ரியத்து காமக்ரோதமெனும் சத்ருக்களை ஜயித்து ஸமஸ்த உலகத்தையும் தன்னிருப்பிடமாகக்கொண்டு ஆனந்தமடையட்டும்.

## த்விதீயாம்சம்—ஆறும் அத்யாயம்.

அரசர் கூட்டமும் பகவானை வணங்கி விடைபெற்று தம் தம் இருப்பிடம் சென்று பகவத் பக்தியிலீடுபட்டது. அவர்கள் சென்றபின் பகவான் கல்கியும் பத்மாவுடன் சேர்ந்து ஸிம்ஹல த்வீபத்தைவிட்டு சம்பல நகரம் செல்ல விரும்பினார். அவர் ஸேனையுடன் கிளம்ப விரும்பியதை அறிந்த தேவேந்திரன், விஸ்வகர்மாவை அழைத்து ஓ விஸ்வகர்மன்! ஶம்பல நகரத்தில் அனேக க்ருஹங்களும், மாடமாளிகைகளும், கோபுரங்களும் அமைந்த அழகிய அரண்மனையை ஸ்வர்ணத்தால் நிர்மாணம் செய்து நீ அறிந்த சில்ப ஸாமர்த்தியம் அனைத்தையும் அங்கு அமைத்துக்காட்டு என்றுரைத்தார். இந்திரன் சொல்லைக் கேட்டு இது பரமமங்களத்தைக் கொடுக்கக் கூடியது என்றெண்ணி ஶம்பல க்ராமத்தில் பகவானுக்கேற்ற வண்ணம் ஸ்வஸ்தி முதலிய சின்னங்களுள்ள விசாலமான அழகிய அரண்மனையைப் படைத்தார்.

ஹம்ஸம், ஸிம்மம், கருடன் முதலியவைகளின் முகம் போன்ற முகங்கள் கட்டடங்களில் அமைக்கப் பட்டன, மேல் மேலே பல பல கட்டடங்களும் வெய்யிலை யகற்றி.

குளுமையான காற்றைத்தரக்கூடிய, எண்ணிறந்த ஜன்னல்களும் அமைக்கப்பட்டிருந்தன. பலவகையான செடி கொடிகள் நிறைந்த உத்யானங்களும், தாமரை ஹம்ஸம் மல்லி குமுதம் முதலியவை நிறைந்த ஓடைகளும் கண்களேயும் மனதையும் கவருவதாக இருந்தன. சுருங்கச் சொல்லின் இந்திரனுக்கு அமராவதிபோல் கல்கிக்கு ஸம்பலமமைக்கப்பட்டது. ஸேனைகளும் உற்றூர் உறவினர்களும் கூட பகவான் கல்கி ஸிம்ஹல த்வீபத்திலிருந்து கிளம்பி காருமதி எனும் இராஜதானியையும் விட்டு கடல் கறைக்கு வந்தார். பகவானிடம் அதிஸ்நேஹமும் பக்தியும் நிறைந்த ப்ருஹத்ரதன் கௌமுதியுடன் கூடவந்த பத்மாவிற்கு ''ஸ்த்ரீதனமாக'' பத்தாயிரம் யானைகளையும் உயர்ந்ததான லக்ஷம் குதிரைகளையும் இரண்டாயிரம் தேர்களையும் இருநூறு தாஸிகளையும் பட்டு பீதாம்பரங்களையும் பலவகை ரத்னங்களையும் அளித்து பக்திப் பரவசனுக நின்றான். பத்மா கல்கி இவ்விருவர்களுடைய முகத்தையே பார்த்துக்கொண்டு ஸம்பளம் செல்கின்றூர்களே என்று வருத்தத்தால் கண்ணீர் கண்களையும் கண்டத்தையு மடைக்க ஒன்றும் சொல்ல முடியாமல் நின்றான். அவரது பக்தியைப் பார்த்து ஸந்தோஷமடைந்த தம்பதிகள் அரசனையும் ராணியையும் நன்கு பூஜித்து நல் வார்த்தைகளைக்கூறி ஊருக்கு அனுப்பினார்கள்.

பகவான் பரிவாரத்துடன் கடலிலிறங்கி அக்கறைக்குச் செல்ல விரும்பியதைக் கண்டு ஸமுத்ரஜலம் அசைவற்று பூமிபோல் நின்றது. அது ஓர் அணைபோலிருக்க, அவ்வழியாக அனைவரும் ஸமுத்திரத்தின் அக்கரைக்குச் சென்று அமர்ந்தனர். பகவான் பத்மா விவாஹத்திற்குக் காரணமாய் இருந்த கிளியை அழைத்து, நீ ஸம்பள நகரம் செல்! ஆங்கு என்னுடைய ப்ரீதிக்காக தேவேந்திரன் விஸ்வகர்மாவைக் கொண்டு மிக விசாலமானதும் அமராவதிபோல் உத்யானங்களும் தாமரை தடாகங்களும் நிறைந்திருப்பதுமான அரண்மனையை அமைத்து இருக்கிறூர். அங்கே நமது பந்துக்களும் நண்பர்களும் ஞாதிகளும் நிறைந்திருக்கும் கூட்டத்தில் ஸிம்ஹல த்வீபத்தில் சாருமதி நகரத்தில் ப்ருஹத்ரதன் கன்னிகையான பத்மாவை யான் மணந்த வ்ருத்தாந்தத்தைக் கூறு. இக்கறையிலிருப்பதையும் சொல். எனது பெற்றோருக்கு நமஸ்கார புரஸ்ஸரமாக க்ஷேமத்தை விசாரித்து பிறகு விவாஹாதிகளைப்பற்றி கூறு. நான் பின்னர் இவர்களுடன்

வருகிறேன் என்ருர். பகவான் சொல்லைக் கேட்டு ஸர்வக்ஞனை கிளி ஆகாச மார்க்கமாகப் புறப்பட்டது.

தேவர்களால் பூஜிக்கப் பட்டதும் ஏழு யோஜனை தூரம் விசாலமானதும் நான்கு வர்ணத்தவராலும் சூழப் பட்டதும் ஸூர்ய காந்திபோல் பிரகாசிப்பதும் நூற்றுக் கணக்கான மாடிகள் உள்ளதும் எல்லா ருதுக்களும் ஒன் ருகக்கூடி இன்பமளிப்பதும் அழகாயுமிருக்கின்ற சம்பள நகரத்தில் நுழைந்தது கிளி. ஒவ்வொரு வீட்டை யும் மாடியையும் பார்த்துக்கொண்டே பறந்து சென்று ஒவ்வொரு வனமாகச் சென்று ஒரு மரத்திலிருந்து மற்ருேர் மரஞ்சென்று புதிய மாளிகைகளைக் கண்டு ஆநந்தமடைந்தது. அதி விசித்ரமான விஷ்ணு யசஸ்ஸின் அரண்மனைக்குச் சென்றது. அங்கு பகவானது பெற் ருேரை வணங்கி பந்துக்கள் சூழ, பல பிரியமான, மதுர மான சொற்களைக்கூறி ஸிம்ஹள த்வீபராஜ குமாரி பத்மாவை பகவான் மணந்து அவளுடன் புறப்பட்டு வரு வதைக் கூறிற்று.

ஸந்தோஷ செய்தியைக்கேட்டு விஷ்ணுயசஸ், குடிகள் அனைவருடன் விசாகயூப மன்னனையும் அழைத்து இந்த ஸந்தோஷத்தைக் கூறினர். அரசன் நாடு நகரங்களை நன்ருக அலங்கரித்தான். ஸ்வர்ணமயமான பூர்ணகும்பங் களும், சந்தநக்குழம்பு அகில் கட்டை தூபம் ஸ்வர்ண தீபம் விசித்ரமான கோலம், பொரி அக்ஷதை மனோஹர மான புஷ்பம் வாழைக்கொலை பாக்குக்கொலை முதலியவை களால் ஸ்வர்க்கம் போலிருக்கும்படி ஏற்பாடு செய்தான். சதுரங்க ஸேனையுடன் பட்டணத்து ஜனங்களின் மநதை யும் கண்களையும் ஆகர்ஷித்துக்கொண்டு ஸ்வர்ணமய மான ரதத்திலேறி வந்தார் பகவான். வரவேற்போர் வாழ்த்துவோர் வாத்யம் இவைகளின் த்வனி வானளாவக் கிளம்பிற்று.

கருணைநிதியான பகவான் கல்கி ரதத்திலிருந்து இறங்கி பத்மாவுடன் முதலில் பெற்ருேரிருப்பிடம் சென் ருர். அவர்களது பாதத்தில் வணங்கி நின்ருர். இந்த்ரனும் இந்த்ராணியும் போன்ற புத்ரனையும் மருமகளையும் ஸுமதி வரவேற்று ஆசீர்வதித்தாள். கட்டி முத்தமிட்டு உச்சிமுகர்ந்தாள். சம்பள நகரம் எங்கும் கொடிகளால் பிரகாசித்து உத்தம ஸ்த்ரீ தனது பதியை வரவேற்பது போல் பகவானை வரவேற்றது. அந்தப்புரமே ஜகநம் -

பின்புறம்-போலும், ப்ராஸாதங்கள் ஸ்தநம் போலவும், மயில்கள் ஸ்தநாக்ரம் போலவும், ஹம்ஸ வரிசை ஹாரம் போலவும், பல வாஸனைப் பொடிகளும் தூபமும் வஸ்த்ரம் போலவும், கோகிலங்களின் த்வனியே குறல் போலும், கோபுரங்களே மந்தஹாஸமுள்ள முகம் போலுமிருந்தது. கலியை அழிக்கும் கல்கி பத்மாவுடன் பல்லாண்டு ஆநந்தமாக ஶம்பள நகரத்தில் வஸித்தார்.

கவியின் மனைவியான காமகலா மிகபல பராக்ரமசாலிகளான ப்ருஹத்கீர்த்தி, ப்ருகத்பாஹு என இரு புதல்வர்களைப் பெற்ருள். ப்ராக்ஞரின் மனைவியான ஸந்ததி என்பவள் இந்த்ரியங்களை வென்றவர்களும், எல்லா உலகத்தாரும் போற்றத்தக்கவர்களுமான யக்ஞன், விக்ஞன் என இரண்டு மைந்தர்களைப் பெற்ருள். ஸுமந்த்ரரின் பார்யையான மாலினி என்பவள் ஸாதுக்களுக்கு உபகாரம் செய்கின்றவர்களான ஶாஸனன், வேகவான் என்பவர்களையும் பெற்றெடுத்தாள். கல்கி பகவான் பத்மாவினிடத்தில் ஜயன், விஜயன் எனும் இரு புதல்வர்களை உண்டுபண்ணினர். இப்பரிவாரங்களுடனும், அமைச்சர்களுடனும், ஸர்வ ஸம்பத்துடனும் கூடின கல்கி ப்ரஹ்மாவைப்போலிருந்தார். அஶ்வமேத வேள்வியைச் செய்ய முயற்சிக்கும் தன் தந்தையைப் பார்த்து, திக்பாலகர்களை வென்று தனங்களைக் கொண்டு அஶ்வமேதம் எனும் வேள்வியை செய்துவைக்கப்போகிறேன். தற்காலம் திக்விஜயத்திற்குச் செல்கிறேன் எனக்கூறி தந்தையின் தாளில் தண்டனிட்டு ப்ரீதியுடன் கல்கி, படைகள் சூழ கீகடம் எனும் நகரத்திற்குச் சென்ருர். பௌத்தர்கள் நிறைந்ததும் மிகவும் விஸ்தாரமானதும் வேத தர்மங்கள் அற்றதும், பித்ரு தேவபூஜைகளில்லாததும், பரலோக பயமில்லாததும், தேஹத்தையே ஆத்மாவென்று வாதம் செய்கின்றவர்களுமான பலருள்ளதும், குலம் ஜாதி அற்றதும், உயர்வு தாழ்வு என்பதில்லாதவர்கள் நிறைந்ததாயும், ஸ்த்ரீ புருஷரென்ற வேற்றுமை இல்லாததாயுமுள்ள நானாவித ஜனங்கள் சூழ்ந்ததாயும், பானத்திலும் போஜனத்திலுமே ஈடுபட்டதாயுமுள்ளது கீகடம்எனும் நாடு.

அந்நாட்டு அரசன் ஜிநன்; கல்கி வருகிருர் என்பதை அறிந்து கோபத்துடன் இரண்டு அக்ஷௌஹிணி ஸேனைகளுடன் பட்டிணத்திற்கு வெளியே போர் புரிய ஸன்னத்தமாகக் கிளம்பினன்.

(21870 யானைகள், 21870 தேர்கள், 65610 குதிரைகள், 109350 காலாட்படைகள் கொண்டது அக்ஷௌஹிணி எனப்படும்.)

கஜரததுரக பதாதிகளுடனும் கனகாபரணங்கள் பூண்ட அனேகர்களாலும், எண்ணிறந்த ஆயுதங்களைத் தாங்கிய வீரர்களாலும் நிறைந்து விளங்கிற்று அந்த ஸேனைகள் தங்கிய இடம்.

## த்விதீயாம்சம் – ஏழாம் அத்தியாயம்.

எங்கும் வ்யாபகராயும், பாபத்தைப் போக்குகிற வருமான கல்கிபகவான், ஸிம்மம் யானைகளைத் தாக்குவது போல, ஜிநன் ஸேனையின் மீது பாய்ந்தார். அந்த ஸேனை யானது ச்ருங்காரத்திலீடுபட்டு களைத்துப் பராங்முகமாக செல்லும் ஸ்த்ரீபோல் இருந்தது. ஓடவுமாரம்பித்தது. அந்த ஸேனையில் உள்ளோரைப் பார்த்து கல்கி, ஹே பௌத்தர்களே! ஓடாதீர்கள்! யுத்தரங்கத்திற்குத் திரும்புங்கள்! யுத்தம் செய்யுங்கள்! உங்களுடைய ஸாமர்த்தியத்தைக் காட்டுங்கள்! எனக்கூறி அழைத்தார். பலம் குன்றிய ஜின னிதைக்கேட்டு கோபத்திஞல் கத்தி கேடயங்களுடன் யுத்தம் செய்வதற்கு வாஹனத்தில் ஏறி வந்தான். பலவகையான அஸ்த்ர சஸ்திரங்களுள்ளவனும் போரில் ஸாமர்த்யம் வாய்ந்தவனுமான ஜிநன் வானவர்களும் மகிழும்படி பகவானுடன் யுத்தம்செய்தான்.

சூலத்திஞல் கல்கியின் வாஹனமான குதிரையைக் குத்தி பாணத்திஞல் பகவான் மோஹிக்கும்படிச் செய்து அவனியில் அசந்து படுத்திருந்த பகவானைத் தூக்கிச் செல்ல முயற்சித்தான். ஆஞல் அவரை அசைக்கவும் முடியவில்லை. ஜினன் அவரை ஸர்வேஶ்வரன் என உணர்ந்து சினத்தால் கண்கள் சிவக்க அவரது கவசத்தையும் ஆயுதங்களையும் பிளந்தான். இதைக் கண்ட "விசாகயூபன்" கதையிஞல் ஜினனை ஓங்கி அடித்து மூர்ச்சிக்கும்படிச் செய்து மூர்ச்சையாக இருந்த பகவானை விளையாட்டாக சிரமமின்றித் தூக்கித் தேரில் வைத்தான். சிறிது நேரத்திற்கெல்லாம் மூர்ச்சை தெளிந்து எழுந்த கல்கி ஸேவகர்களுக்கு உற்சாகத்தை ஊட்டிக்கொண்டு விசாகயூபனது தேரிலிருந்து கிளம்பி ஜினனேடு போர் புரியச் சென்ருர்.

அதற்குள் குதிரை ஜினனது சூலத்தினல் ஏற்பட்ட துக்கத்தை உதறித்தள்ளி மஹாபலபராக்ரமத்துடன் கர்ஜனையினாலும் ஆங்காங்கு சுற்றுவதினலும் காலால் பூமியைக் கீறுவதாலும் கால் உதைகளாலும் பிடரி மயிரை உதறுவதாலும் கோபத்துடன் பௌத்த ஸேனையில் புகுந்து ஆயிரக்கணக்கானவர்களைக் கொன்றது. மூச்சுக் காற்றால் சிலரை வெகுதூரத்துக்கப்பால் எறிந்தது. ரத கஜ துரகபதாதி என்ற நால்வகைச் சேனைகளையும் யுத்தரங்கத்தில் அக் குதிரை பூமியில் தள்ளிற்று. கர்கர் அறு நூறுபேரையும் பர்கர் பலகோடியோதரையும் விசாலன் இருபத்தையாயிரம் பேர்களையும் கவிதனது புத்ரர்களுடன்கூட இருபதுாயிரம் பேரையும் கொன்றார். ப்ராக்ஞன் பத்துலக்ஷம் வீரர்களையும் ஸுமந்த்ரகன் ஐந்து லக்ஷம் ஜினர்களையும் கொன்றான். கல்கி ஜினனைப் பார்த்து, ஓ துர்மதே! என்னெதிரில் நில்! எல்லோருக்கும் சுபாசுப பலனைத் தரும் தெய்வம் நான் என்று அறி. எனது பாணங்களால் அடிபட்டு எல்லோரையுமிழந்து நீயும் அழியப்போகின்றாய்!

அந்த நிலை வருவதற்குள் உனது உறவினர்களை எல்லாம் பார்த்துவிட்டு இஷ்டமானதை அனுபவித்து மரணத்திற்குத் தயாராக வா! என்றார். கல்கி கூறிய சொல்லைக் கேட்டு மஹா கோபங்கொண்ட பலிஷ்டனை ஜினன் கூறினன்: உனது சாஸ்த்ரத்தில் தெய்வம் கண்ணுக்குத் தெரியாதது. எனக் கூறுகிறீர்கள். கண்ணுக்குத் தெரிகின்ற உன்னைத் தெய்வமாயினும் அது, இல்லாவிடினும் கொல்லத் தீர்மானம் செய்துவிட்டேன். கண்ணுக்குத் தெரியும் பொருளையே நம்புகின்றோம் நாங்கள்! நீங்களோ கண்ணுக்குத் தெரியாததை நம்பி மிகவும் ஏமார்ந்து கஷ்டப்படுகின்றீர்கள்! நீ தெய்வ ரூபியா? ஆனல் நாங்கள் கண்ணுக்குப் புலப்படுகின்ற உன்னைப் பார்த்துக் கொண்டிருக்கின்றோமே! பாணங்களால் நீ எங்களை அடிப்பதானல் ப்ரத்யக்ஷமான உன்னை பௌத்தர் அடிக்காமல் தயை காட்ட முடியாது. பௌத்தரை நீ தூஷிப்பது உசிதமல்ல. இந்த தூஷணை யவ்வளவும் உன்னிடத்திலேயே பொருத்தமுள்ளது எனக் கூறி, க்ரூரமான பாணங்களை கல்கி மீது வர்ஷித்தான். அவர், ஸூர்யன் பனியை உதறித் தள்ளுவதுபோல் ஒரு நிமிடத்திற்குள்ளாகப் பாணவர்ஷங்களை உதறித் தள்ளினர். ஜிநன் ப்ரயோகித்த ப்ரஹ்மாஸ்த்ரம், வாய்வாஸ்த்ரம் ஆக்னேயாஸ்த்ரம்

பர்ஜன்யாஸ்த்ரம் மற்றுமுள்ள பல அஸ்த்ரங்களும் கல்கியைக் கண்டவுடன் நடுங்கிப் பயந்து வீணாயின. ஜினனது ஸமஸ்த அஸ்த்ரங்களும் களர் பூமியில் விதைத்த விதை போலும் வேதமறியாதவனுக்குச் செய்த தானம்போலும் விஷ்ணு பக்தர்களை த்வேஷித்து, விஷ்ணு பக்தி செய்வதுபோலும் எல்லாம் பலனைத்தராமல்வீணாயிற்று. கல்கி, காலை மீது ஏறிவரும் ஜினனை மயிரைப்பிடித்து இழுத்துக் கீழேத் தள்ளினார். இருவரும் கோழிச் சண்டைபோல் போர் புரிந்தனர். கேசவனும் சாணூரனும்போல் கையையும் சிகையையும் பிடித்து இழுத்து மஹாபலிஷ்டர்களான ஜினனும் கல்கியும் ஆயுதமின்றி மல்ல யுத்தம் செய்தார்கள். பிறகு, மஹா யோகியான கல்கி ஜினனது இடுப்பை காலால் உதைத்து, யானை பனை மரத்தைத் தள்ளுவதுபோல் கீழேத் தள்ளினார்.

கல்கி ஜினனைக் கொன்று கீழே வீழ்த்தியதைக்கண்டு பௌத்தர்கள் ஆஹா! எனக் கதறினார்கள். கல்கியைச் சார்ந்தவர்கள் பரம ஸந்தோஷமடைந்தார்கள். ஜினன் கொல்லப்பட்ட பிறகு பலிஷ்டனான அவனது ஸஹோதரன் சுத்தோதனன் என்பவன் கையில் கதையை எடுத்துக்கொண்டு பாதசாரியாக, கல்கியைக் கொல்ல முன் வந்தான். சத்ருக்களைக் கொல்பவரான கவியென்பவர் அவனைச் சூழ்ந்து பாணவர்ஷங்களால் வர்ஷித்தார். கதையை எடுத்துக்கொண்டு வாஹனமின்றி வரும் சுத்தோதனனுடன் தர்மமறிந்த கவி, பதாதியாகவே யுத்தத்திற்கு வந்தார். ஶுத்தோதநனும், கவியும் மஹா வீரர்கள். மஹா பலசாலிகள். மதகஜம் இரண்டு தந்தங்களால் யுத்தம்செய்வதுபோல் கதைகொண்டு யுத்தம் செய்தார்கள்.

வீரவாதமும் கதை சப்தமும் வானளாவிற்று. இவர்களது வீர்யத்தையும் யுத்தம் செய்யும் திறமையையும் கண்டு எல்லோரும் வியந்தனர். கவி தனது பலமான கதையால் கலியின் கதையைப் பிளந்துதள்ளி தன் கதையால் சுத்தோதனனின் மாரில் ஓங்கியடித்தார். அடியற்ற மரம்போல் பூமியில் விழுந்த ஶுத்தோதநன் ஒரு நிமிஷத்தில் எழுந்து கதையால் கவியை ஓங்கி அடித்தான். அந்த அடியை ஸஹித்து அசையாமல் தைர்யமாக கட்டைபோல் நின்று, அடியின் பலத்தால் சிறிது நேரம் சித்தங் கலங்கி நின்றார் கவி.

இதைக் கண்டு சுத்தோதநன் பதினுயிரம் தேர்களுடன் மஹா பலசாலியாக நிற்கும் கலியை புஜபலத்தாலோ அஸ்த்ர பலத்தினுலோ ஜயிக்க முடியாது. ஆதலால் மாயாதேவியை அழைத்து வருவோம் எனக்கிளம்பினுன். அந்த மாயாதேவியைக் கண்டமாத்திரத்தில் உலகிலுள்ள தேவர் அஸுரர் நரர் முதலிய அனைவரும் ஶக்தியை இழந்து பொம்மைபோல் நிற்பார்கள். அத்தகைய மாயாதேவியை முன்னிட்டுக்கொண்டு எண்ணிறந்த பௌத்த ஸேனைகளும் ம்லேச்ச ஸேனைகளும் சூழ போருக்கு வந்தான். ஶுத்தோதநன் ஸிம்ம த்வஜம் பறக்கும் தேரில் காக்கை கழுகுக் கூட்டங்கள் சூழ, காம க்ரோத லோப மத மோஹ மாத்ஸர்யங்கள் நாலுபுறமும் சூழ்ந்து நிற்க ஸர்வ சஸ்த்ர அஸ்த்ரங்களை உண்டுபண்ணுபவளும் பல வகையான ரூபமுள்ளவளும் மஹா பலம் வாய்ந்தவளும் ஸத்வ ரஜஸ் தமஸ் எனும் முக்குண வடிவமானவளும் மஹா கம்பீரமாக கர்ஜிப்பவளுமான மாயாதேவி கல்கி ஸேனைக்கு எதிரே வந்தாள்.

இந்த கோர வேஷத்தைப் பார்த்தவுடன் கல்கி ஸேனைகள் பயந்து மூலைக் கொருவராக ஓட ஆரம்பித்தன. தனது பந்துக்களும் ஸஹோதரர்களும் கூட ஓடுவதைக் கண்டு பகவான், தான் அந்த மாயா தேவியின் முன்னே வந்தார். அவளை நன்ருக நக ஶிகைவரை உற்றுப் பார்த்தார். மாயை யார்? பகவானது ஶக்திதானே! அவளும் பகவானது ரூபத்தைக் கண்டவுடன் ஶாந்த லக்ஷ்மீ ஸ்வரூபமாகி வந்து அவரது உடலில் புகுந்து லயமாகிவிட்டாள். பௌத்தர்கள், மாதாவான மாயாதேவியைக் கொண்டு வெற்றிபெற விரும்பினர். அவள் மறைந்துபோகவே உடல் பலம் தேஜஸ் தைர்யம் எல்லாம் குன்றிவிட்டது. என்ன செய்வதென அறியாமல் கூடி அழுதார்கள். ஆஶ்சர்யமடைந்து, எங்கு சென்ருள் அன்னை? ஏன் நம்மைக் கைவிட்டாள்? நாமென்ன தவறு செய்தோம்? என ஏங்கி நின்றனர். பகவான் போர் முனையில் நிற்கும் இவர்களைச் சிவனளித்த கத்தியால் வெட்டிக் குவிக்க எண்ணினுர். ஸன்னத்தமாக அருகில் வந்து நிற்கும் குதிரைமீதேறினுர். பளபளவென்று ப்ரகாசிக்கும் கத்தியைக் கரத்தில் ஏந்தினுர். சிறந்த வில் அம்பராத்தூணி கேடயம் கவசம் கிரீடம் முதலியவைகளைத் தரித்தார். சத்ருபக்ஷத்தைச் சார்ந்தவர்களை நடுங்கும்படிச் செய்யும் க்ரூரமான பார்வையால் பார்த்தார்.

ஆயினும் காமி ஜநங்களது கண்ணுக்குப் பேராநந் தம் ஊட்டுவதான மன்மதன் போன்ற திவ்ய அழகிய ஶரீரமுள்ளவராக இருந்தார். யாகமில்லாமல் போகவே யாகத்தில் கொடுக்கப்படும் உணவில்லாமல் போயிற்று தேவர்களுக்கு. பகவான் மஹா வீரராகத் தோன்றி பௌத்தர் ம்லேச்சர் முதலியவர்களைக் கொன்று வைதிக தர்மத்தை நிலைநாட்ட ஸன்னத்தராக வருகிறார் என்பதைக் கண்டு தேவர்கள் ஸந்தோஷமடைந்தார்கள். வேத தர்ம சாஸ்த்ரங்களைப் பலமாகக் கொண்டு ஸந்தோஷிப்பவரும் ஶாஸ்த்ர விரோதமான கார்யங்களைச் செய்வோரைக் கொல்ல தீக்ஷைபூண்டவரும் யுத்தகோலத்துடன் பிரகா ஶிப்பவரும் ஸாதுக்களை ஆதரிப்பதில் ஆசை உள்ளவரும் பக்தர்களது பாபத்தை அகற்றுபவரும் ஸமஸ்த உலகிற் கும் தந்தையுமான பகவான் கல்கி, எங்களுக்கு க்ஷேமத்தை உண்டுபண்ணட்டும் என தேவர்கள் பிராத் தித்தார்கள்.

இரண்டாம் அம்ஶம் முற்றிற்று.

---

## த்ருதீயாம்சம் – முதல் அத்யாயம்.

பகவான் கல்கி, கத்தியாலும் ஶரங்களாலும் ம்லேச்ச ஸேனைகளை யமலோகத்திற் கனுப்பினார். விஶாகயூபன், கவி, ப்ராக்ஞன், ஸுமந்த்ரன், கார்க்யர், பார்க்யர், விஶா லர் முதலியவர்களும் ம்லேச்சஸேனையைக் கூட்டம் கூட்ட மாகக் கொன்று குவித்தார்கள். கபோதரோமா காசா க்ஷன் கரகக்ருஷ்ணன் முதலிய யுத்தவீரர்களுடன் ஶுத் தோதநன் மறுபடியும் கல்கி ஸேனையோடு யுத்தத்திற்கு வந்தான். இரு ஸேனைகளுக்கும் மஹா பயங்கரமான யுத்தம் துவங்கிற்று. ஒரே ரத்த ப்ரவாஹம்! பூதப்ரேத பிஶாசங்கள் ஆநந்தமடைந்தன.

அடிபட்டு இறந்த யானை குதிரைகளின் 'இரத்தம் பெருகி ஒரு நதியாயிற்று. அதன் பிடரி மயிர்களே பாசி யாக இருந்தது. வில்லுகளே அலைகளாகவும், தலையே ஆமையாகவும், தேரே தோணியாகவும், கைகளே மீன்க ளாகவும் இருந்தன. அந்நதி பலவகையாக இருந்தது. நல்ல மனமுடைய ஸாதுக்களுக்கு ஆனந்தத்தையளித்தது. துந்துபி போன்ற யுத்த வாத்திய ஶப்தமும், நரி கழுகு முதலியவைகளுக்குக் களிப்பை ஊட்டுவதாக இருந்தது. யானைகள் மீதும், குதிரைகளின்மீதும், தேர்களின்மீதும்,

ஒட்டகங்களின்மீதும் ஏறிக்கொண்டு போர் செய்து கை, கால், கழுத்து அறுபட்டு பின்னமான அங்கமுடையவர்களாக அவனியில் விழுந்தனர். சிலர் ஸன்யாஸிகளைப் போல் வேஷம் தரித்துக்கொண்டு, சிவந்த வஸ்த்ரத்தால் முகத்தை மூடிக்கொண்டு புறங்காட்டி ஓடினர். சிலர் ஓடினர். சிலர் அடிபட்டு நீர் நீர் என ஜலத்தை யாசித்தனர். ம்லேச்சர்கள் பலவகையில் துன்பமடைந்தனர். அவர்களுடைய மனைவிகள் சிலர் தேர்மீதும், பக்ஷிகள்மீதும், யானைமீதும், குதிரை, ஒட்டகம், வ்ருஷபம் இவைகளின் மீதும் ஏறிக்கொண்டு போர்புரியக் கிளம்பினர்.

பதியையும், குழந்தைகளையும் ஸுக ஆஶ்ரயமான பொருள்களையும் விட்டுவிட்டு அழகியவர்களும்யுவதிகளும் ஆபரணங்களை அணிந்தவர்களும், பலமுள்ளவர்களுமான பதிவ்ரதைகள் யுத்தத்திற்கு வந்தார்கள். பலவகையான ஆபரணங்களை அணிந்திருந்தாலும் பயங்கரமான கத்தி, ஶக்தி, வில், அம்பு முதலிய ஆயுதங்களை ஏந்தியிருந்தனர். பதியை இழந்த கோபத்தினால் பதிவ்ரதைகளும் மற்றவர்களுடன் கூடி உயிரை த்ருணமாக நினைத்து கல்கி ஸேனையுடன் கூட யுத்தம் செய்தனர். வேதவிதிப்படி மணந்த, ப்ராணனுக்கு ஸமமான பதியையிழந்ததால் அவர்களுடன் தாங்களும் உடன்கட்டை ஏறுவதைத் தவிர ஸ்த்ரீகள் மற்றதை ஏற்பார்களா? தங்கள் பதி அடிபட்டு வீழ்ந்த பிறகு தாங்களும் அங்ஙனமே அடிபட்டுச் சாக ஸங்கத்தமாக போருக்கு வந்தார்கள். இதைக்கண்டு ஸேனையில் உள்ளோர் ஆஶ்சர்யமடைந்து கல்கியினிடம் வந்து அறிவித்தார்கள். கல்கி இதைக்கேட்டு யுத்தரங்கத்துக்கு ஸந்தோஷத்துடன் வந்தார். வ்யூஹம் அமைத்து, ஆயுதம் ஏந்தி வாஹனத்திலமர்ந்து யுத்தத்திற்குத் தயாரான ஸத்ரீகளைப் பார்த்து பகவான் கூறினார். ஓ ஸ்த்ரீகளே! ஹிதமான எனது சொல்லைக் கேளுங்கள். ஸ்த்ரீகளோடு புருஷர்கள் யுத்தம் செய்வதென்பது நல்லதல்ல. அழகிய ம்ருதுவான அவயவங்கள் அமைந்த அபலைகள்மீது அம்பை எறிய எவரே துணிவர்? முத்தாஹாரமணிந்த ஸ்தனங்களோடு கூடிய அழகிய மார்பைப் பிளக்க யார் முன்வருவர்? அழகுக்கு இருப்பிடமான ஒவ்வொரு அவயவத்தையும் கூரான அம்புகளால் அடிக்க ஆண்களின் மனம் துணியுமா? என்று கூறினார். இதைத் கேட்டுச் சிரித்தார்கள் ஸ்த்ரீகள். எங்களது பதியைக் கொன்று

விட்டு அதனுல் பரிதவிக்கும் எங்களிடத்தில் என்ன கருணை உமக்கு? என்ருர்கள் ஸ்த்ரீகள்.

யோதர்களுடைய கைகளிலிருந்த ஆயுதங்கள், அப் பெண்களைப்பார்த்து ஸ்த்ரீகளே! எந்த புருஷனிடமிருந்து உங்களையடிக்க நாங்கள் கிளம்புகின்ருேமோ, அந்த புருஷர் எல்லோருக்கும் ஆத்மா. ஸகல வஸ்துக்களாகவும் இருக்கிருர். எவருடைய ஆணையினுல் நாங்களும் உலகில் உள்ள அனைவரும் வெவ்வேறு பெயர்கொண்டு பஞ்சபூத வடிவமாகவும், ரூப ரஸ கந்தங்களாகவும் ஸஞ்சரிக்கின்ருர்களோ அவர்தான் பரமாத்மா எனப்படும் ஶக்தியாவர். அவருடைய ஆணையால் சிறந்ததான ப்ரக்ருதி என்பது மஹத் அஹங்காரம் முதலிய அண்டங்களையும் பிண்டங்களையும் படைக்கின்றது. அந்த பகவானுடைய மாயையினுல் உலகில் ஸ்ருஷ்டி, பரிபாலனம், லயம் முதலியவைகள் நடைபெருகின்றன. அவருடைய மாயையால்தான் "இவர் என்னுடைய பதி, அவள் என்னுடைய மனைவி, இவன் புத்திரன்" எனக் கூறுகிருேம். இவை இந்த்ர ஜாலம் போலாம். ஸ்னேக மோஹத்தினுல் கஷ்டம் தோன்றுகிறது. அடிக்கடி ஜனன மரணம் ஏற்படுவதினுலுண்டான துக்கத்தால் கல்கியை ஸேவிக்க தோன்றுவது இல்லை. காலன், ம்ருத்யு, யமன், தேவதைகள் எல்லாம் பகவானுன கல்கியினுல் விரிவுபடுத்தப்பட்டவர்கள்.

ஶஸ்த்ர ரூபமான நாங்கள், பெண்களான நீங்கள் உங்களை நாங்கள் அடிப்பது முதலியவை எல்லாம் பகவானை அறியாததால் உண்டான பேதமை. கல்கியின் தாஸர்களான பக்தர்களை நாங்கள் கொல்லமுடியாது. விஷ்ணு பக்தனை ப்ரஹ்லாதனைக் கொல்ல முயற்சித்த ஹிரண்யன் முயற்சிபோல் வீணுகுமது என்று கூறின. ஶஸ்த்ரங்களுடைய சொற்களைக் கேட்டு ஸ்த்ரீகள் ஆஶ்சர்யமடைந்தார்கள். கோபம், சோகம், மோஹம் இவைகளை விட்டு பகவானுன கல்கியை ஶரணமடைந்தார்கள். இதைக்கண்ட கல்கி மந்தஹாஸத்துடன் ஸகல பாபங்களையுமகற்றி ஞானத்தையளிக்கும் பக்தியோகத்தையும் கர்மயோகத்தையும், ஆத்மநிஷ்டையையும், ஞானயோகத்தையும்விஸ்தாரமாக உபதேசித்தார். இதைக் கேட்டவுடன் ஜிதேந்த்ரியர்களாகி பக்தியால் யோகிகளுக்குக் கூட கிடைக்காத உத்தம பதத்தை அடைந்தார்கள். பகவான் இங்ஙனம் ம்லேச்ச ஸ்த்ரீகளுக்கு முக்தியளித்து

பௌத்தர், ம்லேச்சர் முதலியவர்களுடன் க்ரூரமான யுத்தத்தை நடத்தி ஜ்யோதிர்மயமாக ப்ரகாசித்தார்.

இங்ஙனம் பகவான் பௌத்தர்களையும் ம்லேச்சர்களையும் கொன்ற ஸமாசாரத்தைப் படித்தாலும் ஆதரவுடன் கேட்டாலும் அது ஶோகத்தையகற்றி சுபத்தையும் பக்தியையும் தரும். ஜனன மரணமில்லாத முக்தியையும் ஸம்பத்தையும் அளிக்கும். மாயையும் ஸம்ஸார தாபத்தையும் அகற்றும்.

## த்ருதீயாம்சம்—இரண்டாம் அத்யாயம்.

பகவான் கல்கி, ஸகல பௌத்த ஜைன மிலேச்சர்களையும் ஜயித்து ஆங்காங்குள்ள சிறந்த பொருள்களை எடுத்துக்கொண்டு தனது நகரத்திற்கு வந்து சேர்ந்தார். தர்மரக்ஷகரான கல்கி சக்ரதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து திக்பாலகர் போன்ற ஸஹோதரர்களுடனும் பந்துக்களுடனும் சூழ்ந்திருந்தார். அவரை தர்சிக்க எண்ணிறந்த மஹர்ஷிகள் வந்தனர். பகவான் தக்கபடி அவர்களை வரவேற்றார். பகவன்! எங்களை ஆபத்திலிருந்து காக்க வேண்டும் என அவர்கள் ப்ரார்த்தித்தனர். மிகச் சிறிய சரீரம் வாய்ந்த வாலகில்யர் என்ற அம்முனிவர்களைச் சாந்தப்படுத்தி உங்களுக்கு என்ன ஆபத்து? யாரிடம் இருந்து உங்களைக் காக்கவேண்டும்? உங்களை ஹிம்சிப்பவன் தேவேந்த்ரனாயினும் நீங்கள் அஞ்சவேண்டாம், சத்ருவைக் கொல்வேன் என்றார்.

இதைக் கேட்டு ஆறுதலடைந்து அவர்கள் நிகும்பன் என்பவனின் பெண்ணின் கதையைக் கூறினர். விஷ்ணுயஶஸ்ஸின் குலத்தை வளர்க்க வந்த ப்ரபோ! கும்பகர்ணனையும் அவனது புத்ரன் நிகும்பனையும் ஸ்ரீ ராமச்சந்த்ர மூர்த்தியாகத் தோன்றிக் கொன்றீர்கள் அல்லவா? நிகும்பனின் பெண்ணான குதோதரீ என்ற பெண் மிக பயங்கரமானவள். ஆகாச மார்க்கமாக ஸஞ்சரிப்பாள். காலகஞ்ஜன் என்ற ராக்ஷஸனை மணந்துகொண்டாள். அவளுக்கு விக்ஞ்ஜன் என்றோர் புத்ரன் பிறந்தான். அக்குழந்தைக்குப் பால் அளிக்க ஹிமாலயத்தில் தலையை வைத்து நிஷதமலையில் காலை நீட்டிக்கொண்டு படுத்திருக்கிறாள். அவள் மார்மீதிருந்து விக்ஞ்ஜன் பால் அருந்துகிறான். அவள் விடும் மூச்சுக்காற்று புயல்காற்றுபோலிருக்கிறது.

ஏற்கனவே மிகச் சிறிய (விரல் உயரமுள்ள) உருவுள்ள எங்களை அது தூக்கி எறிகின்றது.

தெய்வச்செயலாக தாங்கள் இருக்கும் இடத்தில் வந்து விழுந்தோம். இத்தகைய ஆபத்திலிருந்தும் மற்ற ராக்ஷஸர்களிடமிருந்தும் முனிவர்களான எங்களைத் தாங்கள் காத்தருள வேண்டும், என வாலகில்யாதி முனிவர் பகவானை வேண்டினர். இதைக்கேட்டு பகவான் தனது சதுரங்க ஸேனைகளுடன் ஹிமய மலையை நாடிக் கிளம்பினர். ஹிமயமலை அடிவாரத்தில் சேனைகளை நிறுத்தி இரவு வழி நடந்த ஶ்ரமத்தை அகற்றிக்கொண்டு மறுநாள் காலை கிளம்புவதாக இருந்தார். அங்கு மிக வெண்மை நிறம் வாய்ந்த அலைகளுடனும் நுரைகளுடனும் கூட பாற் கடல் போல் ஒரு நதி தோன்றிற்று. அதைக் கண்டு அனைவரும் ஆஶ்சர்ய மடைந்தனர். இஃதென்ன வென்று ஒன்றும் தெரியாமல் ஸ்தம்பித்து நின்றனர் அனைவரும்.

பகவான் அதன் விருத்தாந்தத்தை நன்கு அறிந்திருந்தும் ஒன்றுமறியாதவரைப் போல் இது என்ன? எங்கிருந்து வருகிறது? இந்த நதி ஒரே பால்வடிவமாக இருக்கின்றதே இதன் பெயரென்ன? என்று முனிவர்களைக் கேட்டார். பகவன்! இது அந்த குதோதரீ என்ற ராக்ஷஸி தன் குழந்தைக்குப் பால் கொடுக்கும் பொழுது அவளுடைய ஒருஸ்தனத்திலிருந்து பெருகிவரும் முலைப்பால், இன்னும் ஏழு நாழிகைக்குள் மற்றோர் நதி இதேபோல் மற்றோர் ஸ்தநத்திலிருந்து வரும். இரண்டும் விரைவில் காய்ந்துவிடும் என்று முனிவர் கூறினர். ஸைநிகர்களுடன் பகவான் இதைக் கேட்டு பேராச்சர்யமடைந்தார். ஒரு ஸ்தநத்திலிருந்து வரும் பாலே இப்படி மஹா நதிபோல் இருந்தால் அவளது அந்த அவயவமும் பூர்ணமான உடலும் எவ்வளவு பெரியதாக இருக்கவேண்டும்? அந்த ராக்ஷஸிக்கு எவ்வளவு பலம் இருக்கவேண்டும்? என்று ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டனர். பகவான் ஸேனையுடன் அவளிருப்பிடத்திற்குப் புறப்பட்டார். ஆங்குள்ள மஹர்ஷிகள் வழிகாட்டினர்.

இமயமலை உச்சியில் அவள் காணப்பட்டாள். அவளது மூச்சுக் காற்றினல் மதயானைகள் தூரே தள்ளப் பட்டன. அவளருகே வந்த ஸிம்மங்கள் அவளது குஹை போன்ற காதுகளில் படுத்துறங்கின. மான்கள் தங்கள்

புத்ர பௌத்ரர்களுடன் அவளது தலை மயிருக்குள்ளே வஸித்து வந்தன. வேடர்களிடம் பயந்து மற்றும் சில மிருகங்கள் அங்கே தங்கின. அது பேன் இருப்பது போலவே இருந்தது அவளுக்கு. மலைமீது மற்றொரு மலைபோல் அமர்ந்திருக்கும் அவளது செம்மட்ட மயிரையும் கோரபற்களையும் சிவந்த பயங்கரமான கண்களையும் குஹைபோல் குரட்டை சப்தத்துடன் இருந்த நாஸிகா த்வாரங்களையும் பார்த்து பகவானது ஸேனையிலுள்ளோர் பயந்து ஓட ஆரம்பித்தனர்.

அவர்களைப் பார்த்து பகவான், ஓ வீரர்களே ! ஏன் அஞ்சுகிறீர்கள் ? இவள் கேவலம் ஒரு பெண் அரக்கி ! அவளுக்கா நீங்கள் அஞ்சுவது ? அக்னிக் கோட்டையினிடையில் நீங்கள் அஞ்சாமலிருங்கள். தைர்யமுள்ளவர்களான நால்வகைச் சேனையைச் சார்ந்தவர்களே ! என்னுடன் வரட்டும் என்று கூறி, ஆயுதம் ஏந்திய சில வீரர்களுடன் பகவான் அங்கு சென்று பாணத்தினால் அவளை அடித்தார், உடனே அவள் பயங்கரமாக சப்தம் செய்தாள். அந்த சப்தத்தினால் அருகிலுள்ளோரும் சேனையைச் சார்ந்தவர்களும் பயந்து மூர்ச்சையாகி விழுந்தார்கள். அவள் ஒரு பெருமூச்சை விட்டாள். அதனால் இழுக்கப்பட்டு அந்த காற்றுடன் சேனையில் உள்ளோர் அவளருகே வந்தார்கள். அவள் வாயைத் திறந்து யானை குதிரை வீரர் முதலியவர்களை விழுங்கினாள். அந்த வேகத்தினால் கோபுர வாயற்போல் விசாலமான அவள் வாயில் பகவான் கல்கியும் உள்ளே சென்றுவிட்டார். அதைக் கண்டு தேவர், கந்தர்வர்கள் பயந்து கூக்குரலிட்டார்கள். சில மஹரிஷிகள் அவளைச் சபித்தார்கள். சில முனிவர் பகவானுக்கு ஜயமுண்டாகும்படி சில மந்த்ரங்களை ஜபித்தார்கள். சில பிராம்மணர்கள் தர்மத்தை ரக்ஷிக்கவந்த பகவானுக்கே இந்த கதி ஏற்பட்டதே என்று துக்கத்தினால் கதறி பூமியில் விழுந்தார்கள். சிலர் உரக்க அழுதார்கள். பாக்கியுள்ள ஸேனையை அவளைச் சார்ந்த இராக்ஷஸர்கள் இழுத்துவந்தார்கள். தங்களைச் சார்ந்த அரக்கியின் செயலைக்கண்டு ஸந்தோஷமடைந்தார்கள் ராக்ஷஸர்கள்.

அவளது வயிற்றில் புகுந்து பகவான் உலகத்துக்கேற்பட்ட துன்பத்தைக் கண்டு வருந்தி தனது ஸ்வரூபத்தை த்யாகம் செய்தார். அவள் வயிற்றிலுள்ள அந்தகாரத்தை நீக்க பாணாக்கினியை ஜ்வலிக்கச் செய்தார்

கத்தியைக் கையில் எடுத்துக்கொண்டு தேவேந்த்ரன் வஜ்ராயுதத்தினுல் வ்ருத்ரனது வயிற்றைப் பிளந்து கொண்டு வெளியில் வந்ததுபோல் கத்தியினுல் அவளது வயிற்றைக் கீறி அவளை மாய்த்துக் கீழேத்தள்ளி உள்ளே சென்ற அனைவருடனும் வெளியே வந்தார். அவளது காது மூக்கு மற்றுமுள்ள த்வாரங்கள் வழியாக யானை, குதிரை முதலியவைகள் வெளிக்கிளம்பின. வெளியில் வந்தவர்கள் கோபங்கொண்டு அவளது அவயவங்களைக் கை கால்களால் அடித்துக் கொன்ருர்கள். அவளது கை கால்கள் புரளும்பொழுது பலர் கீழேவிழுந்தனர். அவளது கூக்குரலால் ஆகாயத்தில் பறந்த பக்ஷிகளும் விமானி களும் கீழே விழுந்தார்கள். இங்ஙனம் தாய்க்கு ஏற்பட்ட துன்பத்தைக் கண்டு துக்கமும் கோபமும் அடைந்த விக்ஞ்ஜன் எனும் அவளது குமாரன் சேனையின் நடுவில் ஆயுதமின்றி வந்து புகுந்தான்.

யானைகளை மாலையாக அணிந்து குதிரைகளை ஆபரண மாகப் பூண்டு பெரும் பாம்புகளை மகுடமாக அமைத்து ஸிம்ஹங்களை மோதிரமாக அணிந்து ஐந்து வயதுள்ளவ ளுயினும் மஹா வீரனைப்போல் பகவானது சேனையை அழித்தான். இதைக்கண்டு ஆச்சர்யம்கொண்டு பகவான் பரசுராமன் அளித்த பிரம்மாஸ்த்ரத்தினுல் அவனது தலையை அறுத்துத் தள்ளிக் கொன்ருர். ரத்தப் பெருக் குடன் அவன் உடலும் அவனுடைய தாயின் உடலும் காவிக்கல் நிறைந்த மலைச் சிகரங்கள் போலிருந்தன. மஹரிஷிகள் கூறியபடி அவ் விருவர்களையும் கொன்று கங்காதீரமான ஹரித்வாரம் என்றவிடத்துக்கு வந்து தங்கினுர் கல்கி. தேவர்கள் பூமாரி பொழிந்துகொண் டாடினுர். முனிவர் வேத வாக்குகளால் துதிசெய்தனர்.

எல்லோராலும் பூஜிக்கப்பட்ட பகவான் பரிவாரங் களுடன் அன்றிரவை அங்கு கழித்தார். காலையில் ஸ்நானம் என்ற வ்யாஜத்தினுல் வைகுண்டநாதனைத் தர் ஶிக்க மஹரிஷிகள் அங்கு வந்துசேர்ந்தனர். ஹரித்வா ரத்தில் கங்காதடத்தில் பிருந்தாரகம் எனும் அரண்யத்தில் தனது பரிவாரங்களுடன் நித்ய கர்மானுஷ்டானங்களைச் செய்து முடித்து அமர்ந்திருக்கும் கல்கியிடம் அனைவரும் வந்து சேர்ந்தார்கள்.

Printed & Published by A. Venkataraman at The Sri Meenakshi Press, Sirkali.

Editor: Srivathsa V. Somadeva Sarma.